● For private circulation only

Book Post

https://christianhistoricalsociety.in/

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்



● அக்டோபர் 2022 திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும் ●விலை : ரூ 60 ●இதழ் 29

# சிற்பிகளை செதுக்கிய சிற்பிகள்



பிரான்சிஸ் சவேரியார்



சுவாட்ஸ் ஐயர்

# ஆசிரியர் சுவடு

**கிறிஸ்துவுக்குள் அன்பான சுவடுகள் வாசகர்களே,**

ஆண்டவரும், மீட்பருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே அனைவருக்கும் வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இக்காலகட்டத்தில் **பராபரன்** நமது வரலாற்றுச் சங்கத்தை மிக சிறப்பாக பயன்படுத்துவதை காணும்போது **பராபரனு**க்கு நன்றியை செலுத்துகின்றோம். வரலாற்றுச் சுவடுகள் மாத ஆய்விதழ் தொடர்ந்து தொய்வின்றி புதிய புதிய தலைப்புகளில் வெளிவந்து கொண்டு இருகின்றது. தமிழகம் முழுவதிலும் இருந்து வரலாற்று அறிஞர்கள், எழுத்தாளர்கள், குருமார்கள், ஊழியர்கள், திருச்சபை மக்கள் என்று அநேகர் வரலாற்றுச் சங்க பணிகளை ஊக்குவித்தும், ஜெபித்தும் வருகின்றீர்கள்.

சங்கத்தின் மறுபதிப்பு புத்தகங்களை இப்போது ஆன்லைன் மூலமாகவும் அநேகருக்கு கிடைக்க வேண்டும் என்று முயற்சி செய்து வருகின்றோம். அறிய வகை புத்தகங்களை சேகரித்து பாதுகாத்தும், டிஜிட்டல் செய்யும் பணிகளையும் செய்து வருகின்றோம். நாம் செய்யவேண்டிய பணிகள் இன்னும் அநேகம் உண்டு. மறந்த, மறைந்த, மறக்கப்பட்ட வரலாற்று உண்மைகளை இன்றைய இளைஞர்களுக்கும், எதிர்கால திருச்சபை மக்களுக்கும் கொண்டு செல்ல வேண்டிய பொறுப்பு நமக்கு உள்ளது. ஆக்கபூர்வமான செயல்வடிவம் கொடுப்போம்.

இம்மாத இதழானது “புதிய சபைகளுக்கான தலைவர்களை உருவாக்குவதில் வரலாற்று மாதிரிகள்” என்ற தலைப்பில் ஆய்வு கட்டுரைகளையும் தலைசிறந்த நாவல்களையும், வரலாற்று உண்மைகளையும் கொண்டு வந்துள்ளது.

வரும் நாட்களில் இன்னும் சிறந்த ஆய்வுகளுடன் வரலாற்றுச் சங்க இதழ் கொண்டு வர முயன்று வருகின்றோம். ஆய்வாளர்கள் ஒவ்வொரு மாதமும் கொடுக்கப்படும் தலைப்பின் கீழ் எழுதி அனுப்ப கேட்டுக் கொள்ளுகின்றேன். ஒவ்வொரு மாதமும் இதழினை வெளிக்கொண்டுவருவதற்கு மிகுந்த பொருட்செலவுகள் உண்டு, தேவைகள் சந்திக்கப்பட ஜெபித்துக்கொள்ளுங்கள். சந்தா, நன்கொடைகளை அனுப்ப இதழின் பக்கங்களிலிருக்கும் வங்கிக் கணக்குகளை பயன்படுத்திக்கொள்ளுங்கள்.

வரும் நவம்பர் மாத தலைப்பாக **“அன்றைய அர்ப்பணிப்பும், இன்றைய சவாலும்”** என்ற தலைப்பில் ஆய்வு கட்டுரைகளை எழுதி அனுப்ப அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

*manna selvakumar*
பாரபரனின் பணியில்

சுஜித் ரெக்ஸ்
**வடிவமைப்பு**

மன்னா செல்வகுமார்
**ஆசிரியர்**
9176780001


கிறிஸ்தவ

வரலாற்றுச் சுவடுகள்


**மாத ஆய்விதழ் சந்தா விபரம்**

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

**வங்கி விபரம்**

“கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்”
மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள
G-Pay மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற எண்ணுக்கு செலுத்தவும்
காசோலை மற்றும் வரைவோலை செலுத்த
‘திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்’
( Tinnevelly Christian Historical Society )
என்ற பெயரில் எடுக்கவும்



A/c Name: Tinnevelly Christian Historical Society
A/c Number : 1748 020000 3684
Bank name : Federal Bank
IFSC code: FDRL0001748




**ஆசிரியர்**
**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401, 91767 80001
christianhistorical@gmail.com




christianhistoricalsociety.in
tchsportal.co.in



Dr.P. ராஜ்ஜா
Puducherry
rajbusybee@gmail.com.



# புனித தோமையார் கட்டிய அரண்மனை

புனிதர்கள் என்றாலே அவர்களைப் பற்றிய பல கதைகள் உலாவி வரும். அவற்றில் பல உண்மையாகவும் இருக்கலாம். சில உப்பு, புளி, மிளகாய் போட்டு அவரவர்களது சுவைக்கு ஏற்றார் போலவும் இருக்கலாம். சரித்திரம் என்ன ஆதாரத்தோடா சொல்லப்படுகிறது! ஆதாரம் கிடைத்தால்தானே.

எந்த நாட்டிலிருந்தோ ஓர் இனம் நம் நாட்டின் மீது படையெடுத்து வருகிறது. சடையப்பர்களை விட எட்டப்பர்கள் மிகுந்த நாடல்லவா நம் நாடு! ஆட்சி மாறுகிறது. கலாச்சாரப் படையெடுப்பும் நிகழ்கிறது. மாற்றம் இல்லாமல் எது இருக்க முடியும்? மீண்டும் வேறொரு இனம் படையெடுத்து வருகிறது. புதுப்பிக்கப்பட்ட கலாச்சாரத்தை அழித்து, இருக்கும் கட்டடங்களையெல்லாம் இடித்து துவம்சம் பண்ணி தன் கலாச்சாரத்தை திணிக்கிறது, மீண்டும் படையெடுப்பு... மீண்டும் அடிதடில்...மீண்டும் சீரழிவு, இப்படியே மாற்றம் மாறிக்கொண்டே இருந்ததால்தான், நம் நாட்டில் எல்லாவற்றையுமே கதைமூலம் சொல்லி, சொல்ல வந்த செய்திகளை அழகாகச் சொல்லி ஆவணப்படுத்திச் சென்றிருக்கின்றனர் நம் மூதாதையர்கள்.

நமக்கு பள்ளிப்பருவத்தில் கற்பிக்கப்பட்டது, நம் நாட்டினுள் பல காரணங்களுக்காக நுழைந்த போர்ச்சுகீசியர்கள், பிரெஞ்சுக்காரர்கள், டச்சுக்காரர்கள், டேனிஷ்காரர்கள், ஆங்கிலேயர்கள் தங்கள் நாட்டுக் கொடிகளோடு கிறிஸ்துவ மதக் கொள்கைகளையும் கொண்டு வந்து பரப்பினர் என்பதே. அதாவது இவை அனைத்தும் 1200-இல் இருந்து 1500 வரையில் உள்ள இடைப்பட்ட காலத்தில்தான் நடந்தது என்று எல்லாம் தெளிவாகத் தெரிந்த சரித்திர வல்லுநர்கள் சொன்னாலும், இந்தியாவில், முக்கியமாக தென்னிந்தியாவில், கிறிஸ்துவர்கள் ஏசுநாதர் வாழ்ந்த காலத்தில் இருந்தே பரவி இருந்தார்கள் என்பது புனித தோமையார் (செயின்ட் தாமஸ்) பற்றிய கதைகள் வரலாற்றுச் சான்று பகர்கின்றன.

தாமஸ் டிம மூஸ் என்றழைக்கப்பட்ட புனித தோமையாருக்கு இன்னொரு பெயரும் உண்டு. அதுவே சந்தேகத் திருத்தூதர்! **'ஆண்டவரைக் கண்டோம்'** என்று மற்ற திருத்தூதர்கள் ஏசு உயிர்த்தெழுந்ததைச் சொல்ல, தோமாவோ, **'அவருடைய கைகளில் ஆணிகளால் ஏற்பட்ட தழும்பைப் பார்த்து, அதில் என் விரலை விட்டு, அவர்**

**விலாவில் என் கையை இட்டாலன்றி நான் நம்பமாட்டேன்'** என்று சொன்னவராயிற்றே. தோமாவின் சந்தேகத்திற்கு அளவே இல்லை போலும். அது அவருடைய குணம். எதையும் எளிதில் ஏற்கவும் மாட்டார், தனக்குப் புரியாத ஒன்றை புரிந்ததுபோல் காட்டிக் கொள்ளவும் மாட்டார். வெளிவேஷம் போடத் தெரியாதவர். இதைப் புரிந்து கொண்ட ஏசுவே தோமாவின் ஐயத்தைப் போக்க முன்வருகிறார். ஐயம் தெளிந்தபின் **'நீரே என் ஆண்டவர். நீரே என் கடவுள்'** என்று சொல்லி நம்பிக்கை முழக்கமிட்டவர்.

கர்த்தராகிய ஏசுவுக்கு பன்னிரண்டு திருத்தூதர்கள் இருந்த செய்தி புதிய ஏற்பாடு நூல்களில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. அவர்களின் பெயர்கள் மத்தேயு 10:24, மாற்கு 3:6-19, லூக்கா 6:14-16, திருத்தூதர் பணிகள் 1:13 என்கிற நான்கு இடங்களில் பட்டியலிடப் பட்டிருக்கின்றன.

ஆங்கில மொழியில் மட்டுமே பைபிளை வாசித்த என்னைப் போன்றோர் தெரிந்து கொள்வதற்காகவே பட்டியலிடப்பட்ட பன்னிரண்டு திருத்தூதர்களின் (அபோஸல்ஸ்) பெயர்களை இரு மொழிகளிலும் இங்கே உங்களோடு பகிர்ந்து கொள்கிறேன். 1.பேதுரு (பீட்டர்), 2.அவருடைய சகோதரர் அந்திரேயா (ஆன்ட்ரூ), 3.செபதேயுவின் மகன் யாக்கோபு (ஜேம்ஸ்) 4.அவருடைய சகோதரர் யோவான் (ஜான்) 5.பிலிப்பு (பிலிப்) 6.பாத்தலமேயு (பார்த்தலோமியோ) 7. தோமா (தாமஸ்), 8. வரி தண்டினவராகிய மத்தேயூ (மாத்யூ), 9. அல்பேயுமின் மகன் யாக்கோபு (ஜேம்ஸ்) 10. ததேயு (ததேயூஸ்) 11.தீவிரவாதியாய் இருந்த சீமோன் (சைமன்) 12. இயேசுவை காட்டிக் கொடுத்த யூதாசு (ஜூடாஸ் இஸ்கேரியேட்)

ஏசு மரித்த பின்னே இந்தப் பனிரெண்டு திருத்தூதர்களும் பல்வேறு நாடுகளுக்குச் சென்று கர்த்தரின் வார்த்தைகளை பரப்பினர். அனைவருமே கொலையுண்டு கொடூர மரணத்திற்குப் பின் மறைசாட்சிகளாகினர். இவர்களில் ஒருவர்தான் தோமா என்கிற தாமஸ் டிமைூஸ். இன்று சென்னை மயிலாப்பூரில் உள்ள சாந்தோம் (செயின்ட் தாமஸ்) ஆலயம் உலகெங்கும் பெருமையாக பேசப்படுவதற்கு காரணம் புனித தோமையாரின் கல்லறை இங்கிருப்பதால்தான். ஏசுவின் திருத்தூதர் ஒருவரின் கல்லறை மீது எழுப்பப்பட்ட ஆலயம் இந்திய நாட்டிலே இது ஒன்றே. இப்படிப்பட்ட ஆலயங்கள் உலகிலே மிகக் குறைவே.

பதிமூன்றாம் நூற்றாண்டிலே இக்கிராமத்திற்கு வந்ததாக **மார்க்கோ போலோ** தன் பயணக்குறிப்பில் எழுதி வைத்திருக்கிறார். செயின்ட் தாமஸ் மலை மீது நெஸ்டோரியின் கிறிஸ்துவர்களால் கட்டப்பட்ட சிறு ஆலயம் ஒன்றும், நெஸ்டோரியின் பாதிரியார்கள் மடம் ஒன்றும், அதனோடே புனித தோமையார் கல்லறையும் இருந்ததாக எழுதி வைத்திருக்கிறார். இன்று ஓங்கி உயர்ந்து நிற்கும் தேவாலயம் 1898-ஆம் ஆண்டு மயிலாப்பூரின் முதல் ஆயரான டோம் ஹென்ரிக்ஸ்ரீட்தெசில்வா அவர்களால் அர்ச்சிக்கப்பட்டதாக சென்னை வரலாறு கூறுகிறது.

மார்க்கோ போலோ புனித தோமையாரைப் பற்றி எழுதும் போது கடல் மட்டத்திலிருந்து 300 அடி உயரமான மலை உச்சியில் ஈட்டி எறிந்து கொல்லப்பட்டார் என்று ஆவணப்படுத்தியிருக்கிறார். வேடன் ஒருவன் ஏதோ ஒரு விலங்கின் மீது விட்ட அம்பு வழி தவறிப்போய் தோமையாரின் உயிரைக் குடித்துவிட்டது என்கிறது வேறொரு கதை, மார்க்கோ போலோ சொன்னது சரியா? கதை சொல்லி கதை விட்டிருக்கிறாரா? இப்படியெல்லாம் ஆராய்ந்து அவதிப்படுவதை விட பிரிட்டிஷ்காரர்களால் செயின்ட் தாமஸ் மவுன்ட் என்று அழைக்கப்பட்ட பரங்கி மலை பல நூற்றாண்டுகளாக யாத்திரிகர்களின் புண்ணியஸ்தலமாக விளங்குகிறது என்பது உலகறிந்த உண்மை என்றே கொள்ளலாம்.

சரி, கதைக்கு வருவோம். கர்த்தரின் பனிரெண்டு திருத்தூதர்களும் பல திசைகளுக்கும் சென்று ஏசுவின் போதனைகளை பரப்பச் செய்யுமாறு பணிக்கப்பட்டனர். தோமையார் இந்தியா செல்ல வேண்டும் என்பது உத்தரவு. சோகமானார் தோமையார். எப்படி அந்த நாட்டை அடைவது? வழி என்ன? என்ற கேள்விகள் அவரைத் துளைத்து எடுத்ததே காரணம். அழுது புலம்ப ஆரம்பித்தவருக்கு அநாதைரட்சகன் போல உதவ வந்தார் தலைமை திருத்தூதர் பீட்டர்.

இருவருமே ஒன்றாய் கிளம்பிவிட்டனர். இருவருக்குமே வழி தெரியாது என்பதுதான் உண்மை இருந்தும் மனமிருந்தால் மார்க்கமுண்டு என்ற பழமொழியை மனதில் நிறுத்திக்கொண்டு, ஏலெலோ ஐலசா பாட்டை பாடிக்கொண்டு பயணமேற் கொண்டனர். ஒரு நகரத்தின் கரை தென்படவே இளைப்பாரலாமே என்று நினைத்து உள்ளே சென்றனர்.

கும்பிடப் போன சாமி குறுக்கே வந்தது என்ற சொல்வதைப் போல அந்நகரத்தில் இந்திய வியாபாரி ஒருவரை இருவருமே சந்தித்தனர். இதற்குப் பெயர்தான் விநோதய சித்தம். இப்படித்தான் இது நடக்க வேண்டும் என்பது அவன் செயல் அல்லவா!

வியாபாரி தன் மன்னர் கொண்டோஃபோரஸ் கட்டப் போகும் அரண்மனைக்கு ஒரு கட்டடக் கலை நிபுணரைத் தேடி வந்ததாகச் சொல்ல, தோமையாரோ அவரிடம் சென்று, **'அடிமை ஒருவனை நீங்கள் வாங்க வேண்டி இங்கு வந்திருப்பின் என்னை வாங்கிச் செல்லுங்கள்.**

**எனக்கு கோயில் கட்டவும் தெரியும். அரண்மனை கட்டவும் தெரியும். அத்தோடு கப்பல் கட்டுமானப் பணியும் அத்துப்படி, எனக்கு ஏர் கலப்பை செய்யவும் தெரியும். உழவும் தெரியும். சரியாக எடைகாட்டும் தராசும் செய்வேன். எடைக்கல்லும் செய்வேன். இத்தோடு மட்டுமல்ல. தீராத நோய் கண்டவர்களைக் கூட எனது திறமையினால் குணப்படுத்தவும் முடியும்,'** என்று ஒரு போடு போட்டார்.

தலை சுற்றி நின்ற வியாபாரி ஒருவழியாக சுதாரித்துக் கொண்டு, **'நீ என்ன விலை?'** என்று கேட்க, தோமையாரோ 'மூன்றே மூன்று தங்கக் காசுகள்தான்,' என்று சொன்னார். அதிகம் ஆசைப்படாதவர் தோமையார்.

தன்னைத் தானே குறைவாக மதிப்பிட்டுவிட்டான் இந்த அடிமை என்று தனக்குள் சொல்லிக் கொண்டே, **'இந்தா! எடுத்துக் கொள், கிளம்பு என்னோடு,'** என்று சொன்னார் வியாபாரி.

**'கொஞ்சம் பொறுங்கள் எஜமானரே... நான் செய்ய வேண்டிய காரியம் ஒன்று பாக்கி உள்ளது,'** என்ற சொல்லியபடியே, அங்கே நின்றிருந்த பரம ஏழைகளிடம் தங்கக் காசுகளைக் கொடுத்து வயிறாற சாப்பிடுமாறு சொன்னார். **'ஒளி விளக்கே! இந்தியா செல்ல எனக்கு வழிகிடைத்து விட்டது. இனி தாங்கள் வந்த வழியே செல்லுங்கள்,'** என்று புனித பீட்டரிடம் சொல்லிவிட்டு, **'இனி அவன் சித்தம்'** என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டே வியாபாரியின் பின்னே சென்றார்.

கொண்டோ 'போரஸ் வடமேற்கு இந்தியாவில் உள்ள 'பார்த்தியா' நாட்டின் மன்னர். அவர் தோமையாரைப் பார்த்ததுமே, அவர் மீது முழு நம்பிக்கை வைத்து, தன் கஜானாவையே அவருக்கு திறந்துவிட்டு, தோமா! நான் உன்னிடம் கணக்கு வழக்கெல்லாம் கேட்க மாட்டேன். என் கஜானாவே காலியானாலும் சரி. நான் சுபீட்சமாக வாழ ஓர் அரண்மனை கட்டிக் கொடுக்க வேண்டும். இந்த ஈரேழு உலகங்களிலும் எங்குமே பார்க்க முடியாத அரண்மனையாக இருக்க வேண்டும். என்ன! செய்வாயா?'

தோமா பலமாக தலையாட்டினார்.

ராஜா கொண்டோ, போரஸ் புன்முறுவலித்தார். அது சரி! அது என்னா கொண்டோஃபோரஸ்? கங்கை கொண்டான், கடாரம் கொண்டான் என்று சொல்கிறோமே! ஒரு வேளை அப்படியாராவது! சரித்திர பூகோள வல்லுநர்களுக்கு இதை விட்டுவிடலாம். ராஜாவும் தனது கனவு மாளிகையை நிஜமாக்குவதின் பொறுப்பை தோமாவிடம் விட்டுவிட்டு, தனது ராஜ்ஜியத்தின் வேறொரு பகுதிக்கு சென்றுவிட்டார். அங்கே அவர் இரண்டு ஆண்டுகள் இருந்து நாட்டை பரிபாலனம் பண்ண வேண்டியிருந்தது.

நாட்கள் குடுகுடுவென்று ஓடுவதால், இரண்டு ஆண்டுகள் குட்டிக்கரணம் அடித்து ஓடிவிட்டன.

தான் சுபீட்சமாக வாழப்போகும் அரண்மனையைக் கண்டு ரசிக்க ஆவலோடு வந்த ராஜாவிற்கு ஏமாற்றமே காத்திருந்தது. அரண்மனையையும் காணோம், ஒன்றையும் காணோம். கஜானா மட்டும் காலியாகிப் போயிருந்தது.

'அரண்மனை என்னவாயிற்று தோமா?' என்று காட்டுக் கத்தல் கத்தினார் ராஜா, அவருக்கு ரத்தக் கொதிப்பு வராமல் என்ன செய்யும்? கஜானா காலி. ஆனால் அரண்மனை எழுப்ப இன்னும் அடிக்கல் கூட நாட்டப்படவில்லை. மன்னர் என்னதான் யோகியாக இருந்தாலும், தோமா செய்த வேலையால், சினம் தலைக்கு மேல் ஏறுவது இயல்புதானே.

இரண்டு ஆண்டுகள் ராஜா இல்லாமல் போனதாலே, ஆட்சிப் பொறுப்பை தோமாவே மானசீகமாக ஏற்றுக் கொண்டு ஏழை எளியவர்களுக்கு வேலை வாய்ப்புகளை தேடிக் கொடுத்து அவர்களை சுபீட்சமாக வாழ வழி செய்தார். பஞ்சத்தை விரட்டி அடித்ததாலே, நோயும் பதறி அடித்து தன்னைத்தானே நாடு கடத்திக் கொண்டது. சிரித்த முகத்தோடே மக்கள் எந்தக் கவலையும் இல்லாமல் வாழ்ந்து கொண்டிருந்தனர். தோமா செய்த வேலை இதுதான்.

ராஜாசெய்யவேண்டியவேலையை, அதைச்செய்ய அவருக்குக் கொஞ்சம் கூட மனம் இல்லாமையினாலே, தோமா செய்திருக்கிறார் என்பதை அறிந்த ராஜா அவரை மனம் திறந்து பாராட்டாமல், தோமாவை சிறைக்குள் இட்டு, சித்திரவதை செய்து பரலோகம் அனுப்புமாறு பணித்தார்.

தோமா சிறைக்குப் போன நேரம் பார்த்துத்தானா மன்னரின் சகோதரரை நோய் தாக்க வேண்டும்? கொடூரமான நோய். தொடர்ந்து நான்கு நாட்கள் செத்துப் போன பிணம் மாதிரி கை கால் அசைவில்லாமல் கிடந்தார்.

மன்னரின் மனதுக்கு உகந்த சகோதரர் அவர். அவர் இப்படி பேச்சு மூச்சில்லாமல் கிடப்பது மன்னருக்கு பெருத்த வேதனையை உண்டு பண்ணியது.

பார்க்காத வைத்தியம் இல்லை. வேண்டாத சாமி இல்லை. நான்காம் நாள் மாலை அந்த அதிசயம் நடந்தது, மன்னரின் சகோதரர் கண் திறந்தார். எழுந்து உட்கார்ந்தார். கண்களை உருட்டி உருட்டிப் பார்த்தார். மிரள மிரள விழித்தார்.

செய்தி அறிந்த மன்னர் தன் சகோதரனைப் பார்க்க ஓடோடி வந்தார். அண்ணனைப் பார்த்ததும் தம்பிக்கு பழைய ஞாபகமெல்லாம் வந்து சூழ்ந்து கொண்டன.

'அண்ணா' என்றழைத்து மன்னரை கட்டிப்பிடித்துக் கொண்டார். 'இத்தனை நாட்களும் நான் மேலோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தேன். அங்குள்ள தேவதைகள் என்னை அழைத்துக் கொண்டு போய் பல



இடங்களை சுற்றிக் காண்பித்தனர். ஓர் இடத்தில் மிகப் பிரம்மாண்டமான அரண்மனை இருந்தது. அதைப் போன்ற ஒன்றை நான் பூலோகத்தில் பார்த்ததே இல்லை.




இதில் யார் வசிக்கிறார்கள்? என்று கேட்டேன்.'

மனம் குழம்பிய நிலையில் இருந்த மன்னர் தன் தம்பியின் வாயையே பார்த்துக் கொண்டே நின்றார். தம்பி மீண்டும் வாய் திறந்தார்.

'நான் கேட்ட கேள்விக்கு தேவதைகள் என்ன பதில் சொன்னார்கள் தெரியுமா அண்ணா ? அந்த அரண்மனை தோமா என்கிற கட்டடக் கலை நிபுணர் தங்களது மன்னர் கொண்டோ.. பேரரசுக்காக கட்டி முடித்திருக்கிறார்,' என்றார்கள் அண்ணா.

தம்பி சொல்லி முடித்ததும், அண்ணன் இருட்டுச் சிறை நோக்கி ஓடினார். திருத்தூதர் தோமையாரை விடுவித்து, அவர் காலில் விழுந்து மன்னிப்பு கேட்டார்.

தோமையார் அரசரைத் தூக்கி ஆசீர்வதித்தார். 'மன்னா! உலகம் தோன்றிய நாளில் இருந்தே பரலோகத்தில் ஆன்மாக்களுக்கான பல வசிப்பிடங்கள் கட்டப்படுகின்றன. இதில் கணக்கிலடங்கா மாளிகைகளும், அரண்மனைகளும் உள்ளன. பூலோகத்தில் ஒவ்வொருவரும் செய்யும் தர்ம காரியங்கள்தான் மேலோகத்தில் கற்களை வைக்கின்றன. தொடர்ந்து செய்யும் தானங்களும், ஏழைகளின் மீது காட்டப்படும் பாசமும் பரிவும் தான் கட்டடம் எழ ஏதுவாகிறது. நீ இங்கே, மலை போல் குவித்து வைக்கும் செல்வங்களில் இம்மியளவு கூட உன்னைப்பின் தொடராது. நீ வாரி வழங்கும் செல்வமோ, உனக்கு முன்னே சென்று மேலோகத்தில் புண்ணியத்தைத் தேடி வைக்கும்.'

மன்னர் அடுத்த வார்த்தை பேசவில்லை. அவரும் அவரது மக்களும் புனித தோமையாரிடம் ஞானஸ்நானம் பெற்றனர். ஆசீர்வதிக்கப்பட்டவர்களாயினர்.

'வந்த வேலை முடிந்தது. நான் மற்ற வேலையை கவனிக்கச் செல்லவேண்டும். எனக்கு விடை கொடுங்கள் என்று தோமையார் சொல்ல, மன்னரும் மறுப்பு ஏதும் தெரிவிக்காமல் வழியனுப்பி வைத்தார்.

கேரள நாட்டை வந்தடைந்த தோமையார், வழிநெடுக உபதேசித்தார். கி.பி.52-ஆம் ஆண்டிலே கிரங்கலூர், பள்ளூர் மக்கள் பலரை தன் செய்கைகளாலும், சொற்களாலும் கிறிஸ்துவ மதத்தை தழுவிக் கொள்ளச் செய்தார். மலபார்கரைவழியாகவேபயணித்தவர்இங்குபல பகுதிகளில் வாழ்ந்த மக்களை கிறிஸ்துவர்களாக்கியதோடு அல்லாமல் ஏழு தேவாலயங்களையும் எழுப்பினார்.

அதன்பின் சோழமண்டலக்கரைக்கு வந்து சேர்ந்தார். இங்குதான் அவர் தனக்கு விதிக்கப்பட்ட மீதமுள்ள நாட்களை கழித்தார். ஏறக்குறைய இருபது ஆண்டுகள்.

பல நூற்றாண்டுகளுக்குப் பின் இந்தியா வந்த போர்ச்சுகீசியர்கள், புனித தோமையாரின் உடலினைக் கண்டு தரிசித்ததாக தங்களது குறிப்பேடுகளில் எழுதி வைத்திருக்கிறார்கள்.

கண்ணால் பார்ப்பதும் பொய், காதால் கேட்பதும் பொய் தீர விசாரிப்பதே மெய் என்று ஆன்றோர் சொல்லிவிட்டுச் சென்றதின் படி, தீர விசாரித்ததில் புலனானது ஒன்றுதான். கிறிஸ்துவம் என்கிற ஒரு மதம் இந்தியர்களுக்கு தெரியும் முன்பே, தென்னகத்தார் பலர் கிறிஸ்துவர்களாகவே இருந்திருக்கிறார்கள் என்பதுதான் அது.

### திருச்சபையில்

# தலைவர்களை உருவாக்கிய மிஷனரிகள்

ஜா.ஜான் ஞானராஜ்
ஆசிரியர், திருநெல்வேலி

தொடக்க காலம் முதலே தமிழகத் திருச்சபையில் புதிய தலைவர்களை உருவாக்குவதில் மிஷனரிகள் முனைப்போடு சிறப்பாக செயலாற்றினார்கள். ஆதலால் தமிழகத்தில் திருச்சபை தொடர்ந்து வலிமையோடு உறுதியோடு நிலைத்திருந்து வருகிறது.

**கத்தோலிக்கக் கிறிஸ்தவ திருச்சபை**

1542 இல் தூய.சவேரியார் கோவாவில் இருந்துகொச்சிவழியாகதூத்துக்குடிநோக்கிபுறப்பட்டு வருகையில் கோவா தூய. பவுல் கல்லூரியில் குருத்துவ கல்வியை கற்று வந்த தூத்துக்குடியைச் சார்ந்த மூன்று கல்லூரி மாணவர்களை அழைத்து வந்தார். சவேரியாருக்கும் மூன்று கல்லூரி மாணவர்களுக்கும் போர்த்துக்கீசிய மொழி நன்கு தெரியும், சவேரியாருக்கு தமிழ் மொழி தெரியாது. அந்த மூன்று கல்லூரி மாணவர்களும் சவேரியார் போர்த்துக்கீசிய மொழியில் கொடுக்கும் மறையுரைகளை மொழி பெயர்த்து தமிழில் கூறுவார்கள்.

இந்தியாவிற்கு வரும் முன்பாகவே இந்தியாவில் கன்னியாகுமரி முதல் ராமேஸ்வரம் வரையில் உள்ள கடற்கரைக் கிராமங்களில் வாழும் மீனவ பரதவ குல மக்கள் மத்தியில் நற்செய்தி பணியைச் செய்ய இருப்பது குறித்து கேள்விப்பட்டிருந்தார். முத்துக்குளித்தல், மீன் பிடித்தல் போன்ற பணிகளைச் செய்து வந்த அவர்களுக்காக ஜெபித்து வந்தார். 1542 இல் தென்தமிழ்நாட்டுக்கு வந்த உடனே ஜெபத்துடன் நற்செய்திப் பணிகளைச் செய்யத் தொடங்கினார்.

தொடக்கத்தில் கோவாவில் செய்தது போல மீனவக் கிராமங்கள் தோறும் அதிகாலையில் மணி ஒன்றை வைத்துக்கொண்டு அதை தெருக்களில் அடித்தவாறு பொது மக்களைக் கூட்டி தாமே நற்செய்தி அறிவித்து வந்தார். தமிழ் மொழியில் அனைத்து ஜெபங்களையும், விசுவாசப்பிரமாணத்தையும், ஞான உபதேசத்தையும் மனப்பாடம் செய்து கொண்ட சவேரியார் அவற்றை கடற்கரை கிராமங்களிலும் உட்புற கிராமங்களிலும் வசித்த மக்களுக்கு சிறப்பாகக் கற்றுக் கொடுத்தார். ஆனாலும் அத்தகைய பணி அவருக்கு முழு திருப்தியை கொடுக்காததால் ஒவ்வொரு மீனவ கிராமத்திலும் நற்செய்தி பணியைப் பின் தொடர் பணியாகச் செய்வதற்கு திருச்சபை தலைவர்களாக செயல்படுவதற்கு கிறிஸ்தவ உபதேசத்தை நன்கு கற்றுக்கொண்ட வேதியர் என்னும் சபை தலைவர்களை நியமிக்கத் தொடங்கினார். அவர்களுக்கு மாதந்தோறும் மாத ஊதியமாக பணம் கொடுப்பது நல்லது என்று எண்ணிய சவேரியார் அதற்கான நல்ல திட்டத்தையும் கண்டு கொண்டார்.

அக்காலத்தில் முத்துக் குளித்துறையில் இருந்து முத்து குளித்தல் மூலம் கிடைக்கும் வருமானத்தில் ஒரு பகுதியை போர்த்துக்கீசிய அரசுக்கு ஆண்டுதோறும் அனுப்பி வைப்பது ஒரு வழக்கமாக இருந்தது. அந்த பணத்தை கிறிஸ்தவ உபதேசத்தை கிராமங்களில் கற்றுக் கொடுக்கும் வேதியர் எனும் சபை தலைவர்களுக்கு வழங்கலாம் என்று எண்ணி அந்த பணத்தை தருமாறு போர்ச்சுக்கீசிய அரசுக்கு கடிதம் எழுதினார். அந்த பணத்தை வேதியர்களுக்கு ஊதியமாக கொடுக்க போர்த்துக்கீசிய அரசும் அனுமதி வழங்கியது.

இவ்வாறு உருவாக்கப்பட்ட சபை தலைவர்கள் புதிய கத்தோலிக்க கிறிஸ்தவர்களை கிறிஸ்தவ உபதேசத்தில் நிலைத்து நிற்க வைப்பதில் பேருதவியாக இருந்தார்கள்.

**சீர்திருத்தக் கிறிஸ்தவ திருச்சபை**

தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்களால் உருவாக்கப்பட்ட வேதநாயகம் சாஸ்திரியார்


C. F. Swartz.

தற்போதைய திருநெல்வேலி டவுணில் ஐயம்பெருமாள் பிள்ளை பேரனாக அருணாச்சலம் என்ற தேவசகாயம் பிள்ளை - ஞானப்பூ அம்மாள் தம்பதியரின் மகனாக 1774 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் ஏழாம் நாளில் வேதநாயகம் சாஸ்திரியார் அவர்கள் பிறந்தார்கள்.

வேதநாயகம் சாஸ்திரியாரின் தந்தை தேவசகாயம் பிள்ளை இந்து மார்க்கத்தில் இருந்து கத்தோலிக்க கிறிஸ்தவத்தை ஏற்றிருந்தார். ஆனால் கத்தோலிக்க கிறிஸ்தவ குருவானவருக்கும் அவருக்கும் இடையே கருத்து முரண்பாடு ஏற்பட்டதால் அதிலிருந்து விலகியிருந்த சூழலில் சீர்திருத்த கிறிஸ்தவத்தை கிளாரிந்தா அம்மையார் மூலம் அறிந்து கொண்டார். சீர்திருத்த கிறிஸ்தவத்தை நன்கு அறிந்து கொள்வதற்காக தேவசகாயம் பிள்ளையை கிளாரிந்தா அம்மையார் 1785 இல் தஞ்சாவூரிலிருந்த சுவார்ட்ஸ் ஐயரவர்களிடம் அனுப்பி வைத்தார். நான்கு மாதங்கள் சுவார்ட்ஸ் ஐயரவர்களிடம் சீர்திருத்த கிறிஸ்தவ உபதேசத்தை கற்று சீர்திருத்த கிறிஸ்தவராக நெல்லை திரும்பினார். இந்நிலையில் பாளையங்கோட்டைக்கு வந்தபோது தேவசகாயம் பிள்ளையின் மகன் வேதநாயகத்தின் நற்பண்புகளையும் அறிவு திறனையும் கண்ட சுவார்ட்ஸ் ஐயரவர்கள் 1786 ஜனவரி மாதம் 12 வயது நிரம்பிய வேதநாயகத்தை தஞ்சாவூருக்கு அழைத்துச் சென்று தமது வீட்டிலேயே அவரை வளர்ப்பு மகனாக வளர்த்து சிறந்த கல்வியையும், இறையியல் கல்வியையும் அளித்தார். சங்கீத புத்தகம் முதன் முதலாக



வேதநாயகத்திற்கு வாசிப்பதற்காக அவரால் கொடுக்கப்பட்டது. 1789 இல் தரங்கம்பாடியில் நடைபெற்று வந்த இறையியல் கல்லூரியில் இறையியல் கல்வி கற்கும் படி வேதநாயகத்தை அனுப்பி வைத்தார்.



இறையியல் கல்வியை நிறைவு செய்தவராக 1793 இல் வேதநாயகம் தஞ்சாவூர் திரும்பினார். 1793 முதல் போதகர் ஞானமுத்து எனும் சபை விசாரணை உபதேசியாருடன் சபை சந்திப்பு மற்றும் சபை விசாரிப்பு ஊழியங்களை அறிந்து கொள்ள சுவார்ட்ஸ் ஐயரவர்களால் வேதநாயகம் அனுப்பப்பட்டார். அந்தப் பணியுடன் 1793 இல் தஞ்சாவூரில் சுவார்ட்ஸ் ஐயரவர்கள் தம்மால் நிறுவப்பட்டிருந்த இறையியல் பள்ளியில் தமிழ், கணிதம், இறையியல் கற்றுக் கொடுக்கும் ஆசிரியராக வேதநாயகத்தை நியமித்தார். இவ்வாறு சுவார்ட்ஸ் ஐயரவர்கள் 13.02.1798 இல் தாம் மரணம் அடைவதற்கு முன்பாகவே சிறந்த சபை தலைவராக வேதநாயகத்தை பயிற்றுவித்து உருவாக்கியிருந்தார்.

தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்களால் உருவாக்கப்பட்ட சபைத் தலைவரான வேதநாயகம் பிற்காலத்தில் பாடல் வழி நற்செய்தி பணியை மிகச் சிறப்பாக செய்தார். சதுர் பிரசங்கம், கதாகாலட்சேபம் எனும் இன்னிசை பஜனை பிரசங்கம் வாயிலாக ஆண்டவருடைய நாமத்தை மேன்மைப்படுத்தினார். சாஸ்திரியார் பட்டம் அவருக்கு கொடுக்கப்பட்டது. வேதநாயகம் சாஸ்திரியாரின் வழிமரபினர் இன்றளவும் நற்செய்தி கூட்டங்கள், பாடல் வழி நற்செய்தி அறிவிப்பு, இன்னிசை பஜனை வாயிலாக ஆண்டவருடைய நாமத்தை மகிமைப்படுத்தி வருவது சிறப்புக்குரியதாக உள்ளது.

நெல்லை அப்போஸ்தலர் கனம். ரேனியஸ் ஐயரவர்களின் மூலமாக உருவாக்கப்பட்ட சபை தலைவர்கள்

நெல்லை அப்போஸ்தலர் கனம். ரேனியஸ் ஐயரவர்களின் மூலமாக ஏராளமானோர் சபை தலைவர்களாக உருவாக்கப்பட்டனர். அவர்களில் இருவரைக் குறித்து சுருக்கமாகக் காண்போம்.

## கனம். தே.ஞானமுத்து ஐயரவர்கள்

திருநெல்வேலி மாவட்டம் நாங்குநேரி அருகில் உள்ள கிராமம் காரங்காடு, அந்த கிராமத்திற்கு ரேனியஸ் ஐயரவர்களால் நற்செய்தி அறிவிக்கப்பட்டது. ஆண்டவர் இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்ட குடும்பத்தாரில் ஞானமுத்து குடும்பத்தாரும் ஒருவர் அக்கிராமத்தில் காலரா நோய் முழுமையாக பரவியது ஏராளமானோர் மரணம் அடைந்தனர். அதைத் தொடர்ந்து கிராமத்தார் அனைவரும் ஊரை விட்டு காலி செய்தனர். அந்நேரம் ஞானமுத்துவின் மகன் தேவசகாயத்தை ரேனியஸ் ஐயரவர்கள் பாளையங்கோட்டைக்கு அழைத்துச் சென்று தாம் பாளையங்கோட்டையில் நடத்தி வந்த செமினரியில் இலவசமாகத் தங்கி படிக்கச் செய்து ஆசிரியர் மற்றும் உபதேசியாராக அவரை மாற்றினார். பிற்காலத்தில் குருவானவராகி கனம்.தே.ஞானமுத்து ஐயரவர்கள் என அவர் அழைக்கப்பட்டார். புலவனூர், கோவிலூத்து ஆகிய கிராமங்களில் தங்கி இருந்து நற்செய்தி பணியை இவர் சிறப்பாக செய்ததோடு ஏராளமான இடங்களில் தேவாலயங்களைக் கட்டி எழுப்பும் பணியையும் செய்தார்.

இவரது வழி மரபினர் தூய.யோவான் கல்லூரி, ம.தி.தா.இந்துக் கல்லூரி ஆகியவற்றில் முதல்வர்களாக தலை சிறந்து விளங்கினார்கள். பெரிய மருத்துவர்களாக இன்றளவும் தலை சிறந்து விளங்குகிறார்கள்.

## தேவசகாயம் உபதேசியார்

1807 ல் ஆழ்வானேரியின் பூர்வீக இரு குடும்பங்களில் ஒன்றான சுவாமியடியான் ஆட்கொண்டான் குடும்பத்து ஈழப்பெருமாள் ஆட்கொண்டான் நாடாருக்கும் மற்றொரு பூர்வ குடும்பமான பெரியநாடார் குடும்பத்து மாடிப்பிள்ளைக்கும் மகனாக சுப்பிரமணியன் என 1807 இல் இவர் பிறந்தார். 1827 ல் ஆழ்வானேரியில் இரவில் நடைபெற்ற சாமக்கொடையின் போது ரேனியஸ் ஐயரவர்கள் செய்த நற்செய்திப்பணியால் கிறிஸ்துவை ஏற்று தேவசகாயம் என இவர் ஞானஸ்நானம் பெற்றார். செமினரியில் கல்வி கற்று ஆசிரியர் மற்றும் உபதேசியார் ஆனார்.

இடையன்குளத்தின் முதல் சபைஊழியாராக 1827 ல் தேவபக்தியும் தைரியமும் கொண்ட தேவசகாயம் உபதேசியார் (1807-1906) நியமிக்கப்பட்டார். இவர் ரேனியஸ் ஐயரவர்களால் உருவாக்கப்பட்ட மிகச்சிறந்த சபை தலைவர் ஆவார். இடையன்குளம், வடலிவிளை, மூன்றடைப்பு, மருதகுளம், பாணான்குளம், புதுக்குளம், காலாங்கரை, மேலக்குளம் கீழப்பாட்டம் மணப்படைவீடு என பல கிராமங்களில் சபை ஊழியராக இருந்து ஏராளமான பிற மதத்தவர்களை கிறிஸ்துவண்டை கொண்டு வந்தார். இவர் 1838 வரை வடலிவிளையில் உபதேசியாராகப் பணிசெய்த போது அடிக்கடி வடலிவிளைக்கு அய்யாவழி மார்க்கம் போதிக்க அய்யா முத்துக்குட்டி சுவாமிகள் (1809 - 1851) வருகை தந்தார்கள். வடலிவிளையில் அவரை எதிர்கொள்ள C.M.S மிஷனில் விடுப்பு பெற்ற தேவசகாயம் உபதேசியார் திருவாங்கூர் சென்று வைத்தியம், வர்மம், சிலம்பம், கற்று வந்தார். அதன் மூலம் இவர் அய்யா முத்துக்குட்டி சுவாமிகளை எதிர்கொண்டார்.

இவரது ஜெபத்துடன் கூடிய செயல்பாடுகளால் அய்யா முத்துக்குட்டி சுவாமிகளின் அய்யாவழி அன்புக்கொடி மார்க்கத்தின் விரிவாக்கச் செயல்பாடு வடலிவிளையோடு நின்றுவிட்டது. மருதகுளம் இரத்தசாட்சி ஏனோக்கு கிறிஸ்தவ விசுவாசத்தில் உறுதியாய் நிலைநிற்கவும். தேவசகாயம் உபதேசியார் காரணமாக இருந்தார்.

கனம்.G. பெற்றிட் ஐயரவர்களால் உருவாக்கப்பட்ட சபை தலைவர் பாக்கியநாதன் உபதேசியார்.

திருநெல்வேலி மாவட்டம் திசையன்விளைக்கும் சுவிசேஷபுரத்திற்கும் இடையில் உள்ள மகாதேவன் குளம் கிராமமே பாக்கியநாதன் உபதேசியார் அவர்களது பூர்வீகக் கிராமம். மகாதேவன்குளத்தில் பெரும் செல்வந்தரான திரு.சுப்பையா நாடார் - ராஜவல்லி அம்மாள் தம்பதியருக்கு 1826 இல் மகனாக மாடசாமி பிறந்தார். பெரும் செல்வந்தரான அவரது தந்தை தம் மகன் மாடசாமிக்கு சிலம்பம், வர்மக்கலை, சித்தவைத்தியம், ஆகியவற்றை முறைப்படி கற்றுக்கொடுத்து அதில் மிகுந்த திறமை கொண்டவராக மாற்றினார். வட்டுதார் உடுத்தி சிலம்பாட்டம் ஆடிய மாடசாமி அதில் பிறரை காட்டிலும் தேர்ச்சி மிக்கவராக இருந்தார். மாடசாமிக்கு 20 வயதான நிலையில் திசையன்விளை சுற்றுவட்டார கிராமங்களில் பாளையங்கோட்டை சி . எம் . எஸ் தலைமை மிஷனரி பெற்றிட் அவர்கள் தலைமையிலான மிஷனரிமார், உபதேசிமார் அடங்கிய குழு 1845, 1846 இல் நற்செய்தி அறிவித்தது. அவர்களால் அறிவிக்கப்பட்ட கிறிஸ்தவ நற்செய்தியின் மூலம் வாலிபரான மாடசாமி கிறிஸ்தவத்தின் பால் ஈர்ப்பு கொண்டவர் ஆனார்.

இதைக் கண்ட மத வைராக்கியம் மிகுந்த அவரது தந்தை சுப்பையாவும் அவரது குடும்பத்தினரும் அவரை கிறிஸ்தவத்தை விட்டு விடுமாறு கேட்டுக் கொண்டனர் வாலிபர் மாடசாமி அதை ஏற்காததால் அவரை வீட்டை விட்டு விரட்டி விட்டனர். விரட்டப்பட்ட மாடசாமி இரவோடு இரவாக நடந்துசென்று அதிகாலையில் பாளையங்கோட்டை C.M.S தலைமை மிஷனரி Rev. பெற்றிட் ஐயரவர்களிடம் தஞ்சமடைந்தார் அவரை ஏற்றுக் கொண்டு அவருக்கு வேத போதனையை அளித்த Rev.பெற்றிட் ஐயரவர்கள் மாடசாமி விரும்பியபடி அவருக்கு பாக்கியநாதன் என்ற பெயரில் அவருக்கு திருமுழுக்குக் கொடுத்தார்.

ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் மலை பிரசங்கத்தில் வருகிற பாக்கியவான்கள் என்ற சொல்லாட்சி மாடசாமியை

அதிகம் கவர்ந்ததால் பாக்கியநாதன் என்ற பெயரை அவர் விரும்பி தெரிந்து கொண்டதாக கூறப்படுகிறது. Rev. பெற்றிட் மூலம் செமினரி கல்வி கற்று பாக்கியநாதன் அவர்கள் விசாரணை உபதேசியாரானார்.

திரு. சு.பாக்கியநாதன் உபதேசியார் அவர்கள் 1862 இல் உபதேசியாராக மருதகுளத்திற்கு வந்தார். மருதகுளம் ஊர் தலைவர் ஏனோக்குவின் இரத்த சாட்சி மரணத்தை தொடர்ந்து. சூறையாடப்பட்ட நிலையில் உருக்குலைந்து போய் இருந்த மருதகுளத்தை தமது இறைபணிகள் மற்றும் சமூகப்பணிகள் மனோ தைரியம் மூலம் கட்டியெழுப்பி மருதகுளத்தை வீரபூமி ஆக்கினார். பாக்கியநாதன் உபதேசியாருக்கு மருதகுளத்தைச் சுற்றி ஏராளமான நிலபுலன்கள் இருந்ததால் உபதேசியார் பணிக்கான ஊதியத்தை அவர் வாங்கவில்லை. சு.பாக்கியநாதன் உபதேசியாருக்கு எட்டு பிள்ளைகள் அதில் இருவர் மாபெரும் சபை தலைவர்களாக எழும்பினர்.

ஒருவர் கனம். சாமுவேல் பாக்கியநாதன் இவர் இந்திய மிஷனரி சங்க முன்னோடி நிறுவனர்களில் ஒருவர், இந்திய மிஷனரி சங்கத்தின் முதல் மிஷனரியாக 06.04.1904 இல் புறப்பட்டு சென்று 1923 வரை அங்கு சிறப்புற பணி செய்தவர். 1923 இல் அதில் சம்பளம் பெறும் காரியதரிசியாக பணி செய்தார்கள். 1923 - 1924 இல் திருநெல்வேலி திருமண்டல குருவானவராக பணி செய்தார்கள் மற்றும் 1891 இல் பாலியர் பக்தி விருத்தி சங்கம் என தொடங்கப்பட்ட பாலியர் சங்கத்தின் நிறுவனர். Rev. சாமுவேல் பாக்கியநாதன் ஐயர் அவர்களே. 1892 இல் பாலர் மனமகிழ்ச்சி பண்டிகையை திருமண்டல அளவில் தொடங்கியவர் இவரே. இவரே பாலியர் சங்கத்தின் முதல் காரியதரிசி, 1850 இல் பாலியர் நேசன் என தொடங்கப்பட்டு ஒரே மாதத்தில் நிறுத்தப்பட்ட அந்த மாத இதழை மீண்டும் தொடங்கி 1903 க்குள் 3500 பிரதிகளாக அனுப்பச் செய்தவர் இவர். பாலர் ஞாயிறு தொடங்கி அதற்கென **பாலர் ஞாயிறிது பாசமாய் வாரும்** என்ற பாடல் எழுதி அதனை பாலர் பவனியில் பாட செய்தவர் இவர்.

மற்றொரு மகன் கனம். சாலமோன் பாக்கியநாதன் இவர் இலங்கையில் கல்லூரி விரிவுரையாளராக பணி செய்தவர் இந்திய மிஷனரி சங்க மிஷனரியாக தோர்ணக்கல் செல்வதற்காக தமது நல்ல வேலையை ராஜினாமா செய்துவிட்டு தமது மனைவி ஜேன் பாக்கியநாதன் உடன் மிஷனரியாக ஆந்திரா சென்றவர். பிற்காலத்தில் சி. எம். எஸ். சுத்தாங்க சுவிசேஷ சபையின் நிறுவனர்களில் ஒருவர் அந்த சபைக்கான தற்காலிக கமிட்டியின் முதல் தலைவர் நிலையான கமிட்டி உருவாக்கப்பட்டதும் அதன் இரண்டாவது தலைவராகவும் பணி செய்தவர். ஆளுமை மிக்க சபை தலைவர்களை உருவாக்கிய மிஷனரிகளை நன்றியோடு நினைவு கூறுவோம்.

## மறையவிருந்த மாணிக்கக் கற்கள் இரண்டாம் பாகம் வந்துவிட்டது ....

கர்த்தருடைய பெரிதான கிருபையால் ,

திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம் அருள்திரு D.A. கிறிஸ்துதாஸ் அவர்கள் எழுதிய **'மறையவிருந்த மாணிக்கக் கற்கள்'** (பாகம் 2) இரண்டாம் பதிப்பை கடந்த 28.9.2022 புதன்கிழமை அன்று முற்பகல் 11.30 அளவில், ஷாலோம் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளியில் (பாவூர்சத்திரம்) வெளியிட்டது. முனைவர் மைக்கேல் ஃபாரடே அந்நூலை அறிமுகம் செய்ய, அப்பள்ளியின் தாளாளர் முனைவர் C.K. ராஜாசிங் அந்நூலை வெளியிட, முதற்படியை முனைவர் சாந்தபிரபுராஜ் பெற்றுக் கொண்டார்.

இந்நூல் வெளியீட்டு விழாவில், ஷாலோம் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி ஆசிரியைகளும், ஜீசஸ் லவ்ஸ் தாளாளர் திரு. ஜான் சாலமன், தலைமை ஆசிரியை திருமதி ஹெப்சிபா திரு. செல்வம் மற்றும் ஆசிரிய, ஆசிரியைகளும் கலந்து கொண்டனர் .





# 75 ஆண்டுகள் நிறைவில்

## தென்னிந்திய திருச்சபை


**ஜே. பர்னபாஸ்**

சேலம் வரலாற்றுச் சங்கம்


75 ஆண்டுகளைக் கடந்து 76 ஆவது ஆண்டில் தனது தொடர் பயணத்தைத் தொடரும் தென்னிந்திய திருச்சபையை வாழ்த்துகிறேன். இப்படியே வாழ்த்தும் லட்சோப லட்சம் தென்னிந்திய திருச்சபையைச் சேர்ந்த சீர்திருத்தக் கிறிஸ்தவர்களில் நானும் ஒருவன். தென்னிந்திய திருச்சபை (Church of South India - C.S.I) கிறிஸ்தவ ஒன்றிணைப்பு முயற்சியில் ஒரு இந்திய சாதனை. இதைப் போலவே வட இந்தியாவில் வட இந்திய திருச்சபை (Church of North India - C.N.I) இவை இரண்டும் இந்தியர்கள் உலகிற்கு அளித்த கிறிஸ்தவ ஒன்றிணைப்பு முயற்சிகளின் சாத்தியமான வரலாற்றுச் சாதனைகள்.

இது ஒரே நாளில் சாத்தியமானது அல்ல, இதற்காக ஏறத்தாழ 100 ஆண்டுகளின் கனவும், தொடர் முயற்சிகளின் திட்டங்களும், கூட்டங்களும், தடைகளாக வந்து நேர்ந்த எண்ணற்ற சோதனைகள், இவற்றை எல்லாம் வென்று சாதித்த வரலாறுகள் திருச்சபைகளின் வரலாற்று ஏடுகளில் புதைந்து கிடக்கிறது.

### தென்னிந்திய ஐக்கியத் திருச்சபை (South India United Church) :

தென்னிந்திய ஐக்கியத் திருச்சபைதான் தென்னிந்திய திருச்சபையின் முன்னோடி. 1901 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் வேலூரில் கூடிய மிஷனெரிமார்கள், மற்றும் திருச்சபை தலைவர்கள் மாநாட்டில்தான் இந்த முன்னோடி திருச்சபை அமைப்பு உருவானது. ஆனால் இந்த முன்னோடி அமைப்பு உருவாவதற்கு முன்பாக லண்டன் மிஷன் மிஷனெரிகள் உருவாக்கிய தென்னிந்திய மாவட்ட கமிட்டி (South India District Committee - S. I. D. C. ) என்ற ஒரு அமைப்பே தென்னிந்தியாவின் பல்வேறு பகுதிகளில் ஸ்தாபிக்கப்பட்ட திருச்சபைகளின் இணைப்பு அமைப்பாக செயல்பட்டு

> “அவர்களெல்லாரும் ஒன்றாயிருக்கவும், பிதாவே, நீர் என்னை அனுப்பினதை உலகம் விசுவாசிக்கிறதற்காக, நீர் என்னிலேயும் நான் உம்மிலேயும் இருக்கிறது போல அவர்களெல்லாரும் நம்மில் ஒன்றாயிருக்கவும் வேண்டிக்கொள்கிறேன்.” - யோவான் 17: 21

வந்திருந்தது. தென்னிந்திய ஐக்கியத் திருச்சபையின் முதல் ஐக்கிய கூட்டம் 1905 ஆம் ஆண்டு மதுரையில் கூடியது. இந்த கூட்டத்தில்தான் தென்னிந்திய ஐக்கியத் திருச்சபை அதிகாரப்பூர்வமாக நிறுவப்பட்டது. 1910 ஆம் ஆண்டு சேலம் நகரிலும், அதன் சுற்றுவட்டாரங்களிலும், அன்றைய ஒருங்கிணைந்த சேலம் மாவட்டம் முழுமையிலுமாக லண்டன் மிஷனெரி சங்கத்தாரால் ஸ்தாபிக்கப்பட்ட திருச்சபைகள் அனைத்தும் சங்கை B. G. மார்ஷெல் ஐயர் (Rev. B. G. Marshall., L. M. S.) அவர்களின் வழிகாட்டுதலின்படி தென்னிந்திய ஐக்கியத் திருச்சபையில் இணைந்தன.



**தரங்கம்பாடி மாநாடு – 1919 :**

வரலாற்றுச் சிறப்புமிக்க தரங்கம்பாடியில் 1919 ஆம் ஆண்டு ஈரோட்டில் புகழ்பெற்ற சங்கை H. A. பாப்லி ஐயரின் (Rev. H. A. Popley, L. M. S.) முயற்சிகளால் அன்றைய திருச்சபை தலைவர்களின் மாநாடு ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த மாநாடுதான் தென்னிந்திய திருச்சபையின் உருவாக்கத்திற்கு முக்கிய காரணமாக அமைந்தது. இந்த மாநாட்டிற்கு தலைமையேற்றவர் இந்தியாவின் முதல் இந்திய பேராயரான சங்கை V. S. அசரியா, அவர்கள். இந்த மாநாட்டில் தென்னிந்திய ஐக்கியத் திருச்சபையைச் சேர்ந்த சங்கை V. சந்தியாகு ஐயர், சங்கை மேஷாக் பீட்டர் ஐயர், சங்கை G. ஷெர்வுட் எட்டி ஐயர், சித்தூர் பகுதிகளில் மிஷனெரி ஊழியம் செய்துவந்த சங்கை D. C. ஹட்டன் ஐயர் ஆகியோர் கலந்து கொண்டனர். இந்த மாநாட்டின் முடிவில் “தரங்கம்பாடி அறிக்கை” வெளியிடப்பட்டது. இந்த மாநாடும், இதன் முடிவான தரங்கம்பாடி அறிக்கையும், தென்னிந்திய திருச்சபைகளின் ஐக்கியத்திற்கான உறுதியான அடித்தளமாக அமைந்தது.



**பேராயர் V. S. அசரியா:**

ஆங்கிலிக்கன் திருச்சபையையும், தென்னிந்திய ஐக்கியத் திருச்சபையையும், மெத்தடிஸ்ட் திருச்சபையையும், ஒன்றிணைப்பதற்கான தொடர் முயற்சிகளை பேராயர் V. S. அசரியா அவர்கள் செய்துவந்தார்கள். தென்னிந்தியாவிலுள்ள சீர்திருத்த திருச்சபைகளை எல்லாம் ஒன்றிணைப்பதற்கான ஒரு கூட்டுக் குழு ஒன்றும் அமைக்கப்பட்டது. அதில் பேரறிஞர் A. J. அப்பாசாமி (பின்நாட்களில் கோவைத் திருமண்டலத்தின் முதல் பேராயராக இருந்தவர்) அவர்கள் முக்கியமான உறுப்பினராகப் பணியாற்றினார். தென்னிந்திய திருச்சபை உருவாக முக்கிய காரணமாக இருந்து அதற்காக காலமெல்லாம் உழைத்துவந்த பேராயர் V. S. அசரியா அவர்கள் தென்னிந்திய திருச்சபையின் அருணோதயத்தைக் காண்பதற்கு முன்பாகவே 1945 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதலாம் நாள் இறைபதம் சேர்ந்துவிட்டார்.

திருச்சபைகளின் நிர்வாகத்திற்கும், சுதேச இயக்கங்களுக்கும், இந்திய தலைமை உருவாகவேண்டும் என்று குரல்கொடுத்த முதல் இந்திய கிறிஸ்தவ தலைவர் K. T. பால் அவர்கள்தான். அப்பொழுது இந்திய திருச்சபைகளில் நிலவிவந்த அதிருப்தி, கருத்து வேற்றுமைகள், ஆகியவற்றிற்கு முக்கிய காரணம் ஐரோப்பிய மிஷனெரிமார்கள் இந்தியர்களின் கருத்தை திருச்சபை மாமன்ற கூடுகைகளில் பிரதிநிதித்துவப் படுத்தாமையே என்று கனம் K. T. பால் கூறிவந்தது மட்டுமல்லாது இந்த நிலை மாற வேண்டும் என்றும் வலியுறுத்தியும் வந்தார்.



1910 ஆம் ஆண்டு சென்னை பேராயர் இல்லத்தில் நடந்த திருச்சபைகள் ஒன்றிணைப்பு கூடுகையில் (Madras Meeting -1910) பேராயர் V. S. அசரியா அவர்களோடு, தென்னிந்திய ஐக்கியத் திருச்சபை பிரதிநிதிகளாக சேலத்துச் செம்மல் K. T. பால், சங்கை எட்டி ஐயர், மற்றும் சங்கை J. P. ஜோன்ஸ் ஐயர், ஆகியோர் கலந்து கொண்டனர்.

சீர்திருத்த கிறிஸ்தவ ஒன்றிணைப்பு இயக்கத்தை ஆதரித்து மிஷனெரிமார்கள், திருச்சபை தலைவர்கள், ஆகியோரின் கூடுகைகளில் எல்லாம் கனம் K. T. பால் தென்னிந்திய ஐக்கியத் திருச்சபை (S. I. U. C.) சார்பாக கலந்துகொண்டு தனது பங்களிப்பை தொடர்ந்து அளித்துவந்தார். ஆனாலும் தென்னிந்திய திருச்சபை

உருவாக்கம் பெற்ற அந்த வெற்றியின் பொன்நாளை கண்குளிர காணும் முன்பே 1931 ஆம் ஆண்டு லண்டனில் நடந்த முதலாம் வட்டமேசை மாநாட்டில் பங்கேற்று இந்தியா திரும்பிய ஒருசில நாட்களிலேயே நோயுற்று திடீரென காலமானார்.

**தென்னிந்திய திருச்சபையின் பவள விழா :**

இன்று இலங்கைத் தீவின் யாழ்ப்பாணம் முதலாக தென்னிந்தியாவின் ஐந்து தென் மாநிலங்களை உள்ளடக்கிய 24 திருமண்டலங்களைக் கொண்ட ஒரு மிகப்பெரிய திருச்சபையே நமது தென்னிந்திய திருச்சபை ஆகும். இன்று இது நான்கு மில்லியனுக்கும் மேற்பட்ட உறுப்பினர்களைக் கொண்டு இந்தியாவில் உள்ள ரோமன் கத்தோலிக்கத் திருச்சபைக்கு அடுத்த இடத்தில் இந்தியாவின் இரண்டாவது மிகப்பெரிய கிறிஸ்தவ திருச்சபை அமைப்பாகத் திகழ்கிறது. இந்த மகத்தான சீர்திருத்த கிறிஸ்தவ திருச்சபை ஐக்கியத்தை ஏற்படுத்த நமது முற்பிதாக்கள் எத்தனை எத்தனை கூட்டங்களை, மாநாடுகளைக் கூட்டினர்; எத்தனை எத்தனை கூட்டுக் குழுக்கள், இவைகள் அத்தனையிலும் சந்தித்த ஆதரவுகள், பெற்ற எதிர்ப்புகள் அவைகள் அனைத்திலும் அவர்கள் வெற்றிவாகை சூடிவந்தது சிறப்பான வரலாறு. அவர்கள் இவர்கள் என்றில்லாமல் எல்லோரும் ஒன்றாயிருக்க இறைத் திட்டம் இவ்வாறு நிறைவேற, தென்னிந்தியாவிலுள்ள சீர்திருத்த கிறிஸ்தவ திருச்சபைகளின் ஐக்கியம் தென்னிந்திய திருச்சபையாக உருவாக, இந்த ஒன்றிணைப்பின் ஐக்கியம் இந்தியர்கள் குறிப்பாக தென்னிந்தியர்கள் இந்த வேற்றுமைகள் நிறைந்த உலகிற்கு அளித்த ஒரு புதுமை. கிறிஸ்துவில் அனைவரும் சமம் என்ற சமத்துவம் நிலவமும், ‘அவர்கள் அனைவரும் ஒன்றாயிருக்க’ இறைமகன் இயேசு வேண்டிக் கொண்டதுபோல நாமும் வேண்டிக்கொள்வோம்.

1947 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 27 ஆம் நாள் இலங்கைத் தீவின் யாழ்ப்பாணம் முதல் தென்னிந்தியா முழுமையிலும் வெவ்வேறு பிரிவுகளாய் பிரிந்து தனித்தனியாக இறைப்பணியாற்றி வந்த சீர்திருத்த திருச்சபைகள்அனைத்தும்ஒன்றாகஇணைந்துதென்னிந்திய திருச்சபையாக சென்னை தூய ஜார்ஜ் பேராலயத்தில் உதயமானது. இன்று தனது தொடர் இறைபயணத்தில் 75 ஆண்டுகளை நிறைவு செய்து பவள விழா (Platinum Jubilee) காணும் தென்னிந்திய திருச்சபையை வாழ்த்துகிறேன். அந்த மகத்தான உதயநாளைப் போற்றுகிறேன்.



# பூமி சாஸ்திரம் புத்தகத்தை அவசியம் படியுங்கள்.!

ஏனென்றால் இந்நூலானது இன்றைக்கு எழுதப்பட்டதல்ல. 1832 -ஆம் ஆண்டு ரேனியஸ் ஐயர் அவர்களால் எழுதப்பட்டது. அதனால் 1800 -களில் மிஷனரிகளின் ஊழிய தாகம் எந்த அளவு இருந்திருக்கிறது என்பதையும், இவ்வுலகின் ஒவ்வொரு மனிதனும் கர்த்தரின் படைப்பான இவ்வுலகைக் குறித்ததான அறிவை பெற்றிருக்க வேண்டும் என்பதற்காய் அக்கால மிஷனரிகள் எடுத்துக்கொண்ட பிரயாசம் என்னவென்று அறிந்துகொள்வதற்கும், அதற்காக அவைகளை எவ்வளவு நேர்த்தியாய் எழுத்து வடிவில் விளக்கியிருக்கிறார்கள் என்பதை அறிந்துகொள்ளவும், அக்காலத்தில் நம் மூதாதையரின் உலக ஞானம் எப்படி இருந்திருக்கிறது என்பதை அறிந்துகொள்வதற்கும், அக்கால உலகத்தைக் குறித்த புவி அமைப்பு மற்றும் சரித்திரங்களை அறிந்து கொள்வதற்கும் இந்நூலை நீங்கள் அலட்சியப்படுத்தாமல் ஒருமுறை வாசியுங்கள்.

நான் இந்நூலை இக்கால நடைக்கு மாற்றுகையில் மிகவும் வியந்து போனேன். நம் மூதாதையர் சரியான கல்வியறிவை அடைவதற்காக இந்தப் பூமியினுடைய தன்மையையும் அதிலுள்ள கண்டங்களையும் சமுத்திரங்களையும் தேசங்களையும் தீவுகளையும் அவைகளிலுள்ள ஆளுகைவகை முதலானவைகளையும் அந்தத் தேசத்தாருடைய சரித்திரங்களையும் எவ்வளவு நேர்த்தியாய் தொகுத்து வழங்கிருக்கிறார்கள் என்பதை அறிகையில் ஆச்சரியப்பட்டுப் போனேன்.

அதுவும் இந்த அறிவை நமக்குப் புகட்ட ஏதுவாய் அவர்கள் உலக உருண்டையை எப்படி பயன்படுத்தியிருக்கிறார்கள் என்பது ஆச்சரியத்திலும் ஆச்சரியம். சிறுவயதில் அந்த உலக உருண்டையை ஒரு விளையாட்டு பொருளைப் போலத்தான் நான் விளையாடி இருக்கிறேன். ஆனால் இந்நூலை வாசித்த பின்புதான் அதற்குள் இவ்வளவு இருக்கிறது என்பது எனக்குப் புரிந்தது.

அதேபோல் பூமியானது சக்கர ரூபமானது என்று சொல்லிவிட்டு, அதை விளக்குவதற்கு சந்திர கிரகணத்தின்போது பூமியினுடைய நிழல் சந்திரன்மேல் சக்கரமாய் இருப்பதை சுட்டிக்காட்டுவதும், சமுத்திரத்திலே கப்பல் வரக்காணும்போது. முதலாவது பாய்மரத்தின் நுனியையும் பின்பு அது கிட்டவருகையில் அதன் பாய்களையும் பின்பு கப்பலின் உடலையும் காண்பதையும் எடுத்துக்காட்டுவது அருமையோ அருமை..! சிறுவயதில் கடற்கரையில் நின்று நானும் இப்படிக் கண்டது உண்மைதான் என்றாலும் ஒருநாளும் ஏனோ எனக்கு இந்த அறிவு தோன்றியதே இல்லை.

அதேபோல் அக்காலத்தில் நம் மூதாதையரின் கல்வியறிவு மிகக் குறைவாய் இருந்ததனால் ஒருநாள் ஒருவருடம் இப்படிப்பட்டவைகள் எப்படி கணிக்கப்படுகிறது, இரவு பகல் எப்படி உண்டாகிறது என்பவைகளையும் மிக அழகாய் விளக்கியிருப்பதைக் காணும்போது நம் சந்ததி அறிவடைய வேண்டுமென எவ்வளவு பிரயாசப்பட்டிருக்கிறார்கள் என்பது தெரிகிறது.

இவைமட்டுமல்ல. தேசங்களின் சரித்திரங்கள் அனைத்தையும் சிறிதும் பாரபட்சம் இல்லாமல் ஒளிவு மறைவு இல்லாமல் அப்படி அப்படியே வழங்கியிருப்பது இந்நூலின் இன்னொரு சிறப்பு. பள்ளி நாட்களில் வரலாறு பாடத்தை கசப்பாய் கண்ட எனக்கு நாம் ஏன் அப்படியிருந்து விட்டோம். நன்றாய் ருசித்து படித்திருக்கலாமோ என்று வருத்தப்பட வைத்தது. எல்லாவற்றிலும் மேலாக மார்ட்டின் லுத்தர் அவர்களை மாபெரும் புரட்சியாளனாக வெகுண்டெழும்ப பண்ணின சூழ்நிலையை பல இடங்களில் தெளிவாக புரிந்து கொள்ள முடிந்தது.

அதனால் இந்நூல் மொத்தத்தில் மிக அருமையான நூல். எனவே உடனே வாங்கி வாசித்துப் பயன்பெறுங்கள். நன்றி.!

**திருமதி. மிரியாம் கயல்விழி**

தமிழ் நாட்டின்
தனிப்பெரும் நாவலாசிரியர்

அ.மாதவையா
அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்

தொடர் –19



**தடம் புரண்டது (மூன்றாம் பாகம்)**

காலைப்பொழுது மந்தாரமாகத் தொடங்கியபோதிலும் மத்தியான வேளையில் வெயில் எக்கச்சக்கமாய் எரித்துக்கொண்டிருந்தது. மணம்புச்சாவடியில் தமது பங்களா வராந்தாவில் லிட்டில்டன் குழாயைப் புகைத்தவண்ணம் மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தார். அவர் யாரையோ எதிர்பார்த்திருந்தது போல அடிக்கடி வெளியில் எட்டிப்பார்த்தார். மிகவும் பரப்பரப்பாகக் காணப்பட்டார். புருவங்கள் நெரிந்தன. கண்கள் தீப்பொறி வீசுவனபோல் சிவந்திருந்தன. வலியவர்கள் எளியவர்களுக்கு இழைத்திடும் அநீதியைக் கண்டு கொதித்துச் சாடும் ஆங்கிலப் பண்பு அவர் கோபத்தைக் கிளறிவிட்டிருந்தது.

திடீரென்று 'அதோ வந்துவிட்டார்கள்!' என்று உரக்கச் சொல்லிக்கொண்டே, எதையோ நிச்சயப்படுத்துவதற்குப் போல், வீட்டுக்குள் ஒரு நிமிடம் சென்றுவிட்டு, பின் வராந்தாவுக்கு வந்து முன்போல மேலும் கீழுமாய் நடக்கத் தொடங்கினார்.

முப்பது நாற்பதுபேர் அடங்கிய ஒரு கூட்டம். அவர்களில் சிலர் கத்திகளையும், வேலிகளிலிருந்து பிடுங்கிய கம்பு கழிகளையும் வைத்திருந்தார்கள். அவர்கள் பங்களாவை நோக்கி இரைச்சலிட்டுக்கொண்டு வந்து சுற்றுச் சுவர்க்கு வெளியே நின்றனர். சிறிதுநேரம் ஆலோசனை செய்வதற்காக இரைச்சலை முடிந்தவரை குறைத்துக்கொண்டு விரலை நீட்டி நீட்டிஆங்கிலேயரைச்சுட்டிக்காட்டிப்பேசினார்கள். அவர்அதைக் கவனியாதவர்போல் மேலும் கீழும் நடந்துகொண்டிருந்தார். சற்றுநேரம் கழித்து அமாத்யாவும் இன்னொருவரும் அவரைப் புரோகிதர் என்று லிட்டில்டன் அடையாளம் கண்டுகொண்டார் காம்பௌண்டுக்குள் நுழைந்து வராந்தாவை நோக்கி வந்தார்கள். மற்றவர்கள், ஒரு வேப்பமரத்தின் நிழலில் உக்கிரமாக நின்றுகொண்டிருந்தார்கள். வராந்தாவுக்கு எதிரில் இருந்த கீற்றுக்கொட்டகைக்கு வந்ததும் அமாத்யா 'சார்!' என்று சற்றுக் காட்டமாகக் கூப்பிட்டார்.

லிட்டில்டன் திடீரென்று கோபாவேசமாகத் திரும்பி 'போ, போ, பிச்சைக்கு வருவதற்கு இதுவா நேரம்? உங்களுக்கு எல்லாம் வெயில் தான் உரைக்காது என்றால் மானமும் உரைக்காது போலிருக்கிறது?' என்றார்.

அமாத்யா குளறியவராய் 'நாங்கள் பிச்சைக்காரர் அல்ல, உங்களுக்கு என்னைத் தெரியவில்லை? நான் மகாராஜாவின் அமாத்யா.'

வராந்தாவின் ஓரத்தில் நின்றுகொண்டு லிட்டில்டன் 'ஓஹோ நீங்களா? இந்தமாதிரி ஆடையில்லாமல் நான் உங்களைப் பார்த்ததில்லை பாருங்கள். அதனால், தவறு நேர்ந்து விட்டது. மன்னிக்கவேண்டும். ஆனால், இந்தப் பதைக்கிற வெயிலில் என்ன அவசரம் அப்படி? உங்கள் பல்லக்கு எங்கே?' என்று கேட்டார். 'இன்று காலையில் நீங்கள் திடீரென்று வந்து தூக்கிக் கொண்டுபோனீர்களே, அது என் அண்ணாவின் மனைவி. உங்களுக்குத் தான் அவரைத் தெரியுமே. ரஜாவில் இருந்த திவான் நேற்று மாலையில் காலமாகிவிட்டார். அது அவர் மனைவி. அவர் போனதற்கப்புறம் உயிர்வாழ மனமில்லாமல் அவள் சதியாகிவிட்டாள். எங்கள் சாஸ்திரப்படி அது தான் பதிவிரதைகளுக்கு அழகு.'

லிட்டில்டன் குறுக்கிட்டு 'உங்கள் அண்ணா இறந்து விட்டாரா? நான் மிகவும் விசனப்படுகிறேன். எனக்கு அவரை மிகவும் பிடிக்குமே. கௌன்ட் லாலி எப்படி ஆறு பிராமணர்களை பீரங்கி வாயில் வைத்துச் சுட்டான் என்கிறதை அவர் சொல்லிக் கேட்கவேண்டும். அப்படிச் சொல்லுவார்! எங்களுக்குப் பிராமணனும் ஒன்று தான் பறையனும் ஒன்று தான் என்பது பாவம் அவருக்குப் புரியவே இல்லை.' 'நான்

சொன்னது என்னவென்றால் என் அண்ணாவின் மனைவி எங்கள் சாஸ்திர விதிப்படி சதியாகிய சடங்கை நிறைவேற்றிக் கொண்டிருந்தாள். எங்கள் வழக்கங்கள் பற்றி உங்களுக்குத் தெரியாமல் அவளைத் தூக்கிக்கொண்டு போய்விட்டீர்கள். ரொம்பவும் புனிதமான ஒரு மதச்சடங்கிலே நீங்கள் குறுக்கிட்டுவிட்டதால் அதோ அங்கே வெளியே நிற்பவர்கள் எல்லாரும் மிகவும் ஆத்திரமாக இருக்கிறார்கள். நான் தான், ஏதோ தெரியாமல் செய்துவிட்டார். நல்லது செய்கிறோம் என்கிற தவறான நினைப்பிலே செய்துவிட்டார் என்று சொல்லி அவர்களைச் சமாதானப்படுத்தி வைத்திருக்கிறேன். உங்களிடம் பேசி, சதியை மீண்டும் அழைத்துக்கொண்டு வந்து விடுகிறேன் என்று வாக்களித்துதான் சாந்தப்படுத்தினேன்.' 'அழைத்துக்கொண்டுபோய் என்ன செய்வீர்கள்?' 'சதியாக அர்ப்பணமாகி இருக்கிறாளே, அந்தச் சடங்கை முடிக்கவேண்டியது.'

ஆனால், அவள் மயக்க நிலையில் இருந்தால்? அல்லது மனம் ஒப்பவில்லையெனில்?' 'புனிதமான சடங்கை எப்படியும் முடித்தே ஆகவேண்டும்.'

தன்னினைவு இழந்தநிலையில் இருக்கும் பெண்ணை அவள் சம்மதம் இல்லாமல் தீயை வைத்துக் கொளுத்தப் போகிறோம் என்று சொல்லுகிறீர்கள் இல்லையா? அது வன்கொலை யாகும் . . .'

ஆனால், அவள் சம்மதம் தந்துவிட்டாள். அவள் 'சதியாவதற்குத் துடித்துக்கொண்டிருந்தாளே' என்றார் அமாத்யா. இதுவரை மௌனமாக இருந்த புரோகிதர் இப்பொழுது குறுக்கிட்டு 'எங்கள் மத சம்பிரதாயங்களில் தலையிட்டுக் கலைப்பதற்கு உங்களுக்கு உரிமை கிடையாது. எங்களுடைய வழக்கப்படி நாங்கள் எதுவும் செய்வோம். கலிமுற்றிப் போனதினாலே தான் மிலேச்சர்களும் அந்நியர்களும் எங்கள் புனிதமான மத அனுஷ்டானங்களைக் கலைக்கப்பார்க்கிறார்கள். இது உங்கள் நாடு அல்ல. பெண் உங்களவரும் அல்ல. சதியை உடனே கொடுக்கப்போகிறீர்களா இல்லையா?' என்று இரைந்தார்.

'மிகவும் புனிதமான மீறமுடியாத உரிமை ஒன்று இருக்கிறது' என்றார் லிட்டில்டன். கோபம் ஏறியது அவருக்கு. 'உயிரைக் காப்பாற்றியவனுக்கு அந்த உயிர்மீது, உலகில் வேறு யாரையும்விட அதிக உரிமை இருக்கிறது. ஆனால், உயிரை அழிக்க முயன்றவனுக்கு அவன் அந்த உயிரைப் பிறப்பித்தவனாகவே இருந்தாலும்கூட அதன்மீது அவனுக்கு எவ்வித பாத்தியதையும் கிடையாது என்பது உமக்குத் தெரியாதா? நான் இந்தப் பெண்ணின் உயிரை இரண்டு முறைகள் காப்பாற்றி இருக்கிறேன். அமாத்யாவுக்கு நினைவிருக்கலாம். முதல் தடவை விஷப்பாம்புக் கடியிலிருந்தும், இன்று இரண்டாம் தடவையாக அதைவிடப் பயங்கரமான மரணத்தினின்றும் இரட்சித்திருக்கிறேன். ஈவு இரக்கம் இல்லாத மிருகத்தைப்போன்ற நீங்கள் அறியாமையினால் தான் இப்படிக் கேட்கிறீர்கள்' என்றார்.

அமாத்யாவும் கோபமாக, 'நீங்கள் எங்களை இம்மாதிரி வையக்கூடாது. இந்த வயோதிகர் பெரிய பண்டிதர். மரியாதைக்குரிய புரோகிதர். அந்தக் கலகக்காரரிடம் உங்களுக்காகப் பரிந்துபேசிய என்னையும் நீங்கள் அதற்கு தகுந்தவாறு நடத்தவேண்டும். நானும் உங்களிடம் உள்ளது உள்ளபடி பேசுகிறேன். வேறு அனர்த்தம் நேருவதற்குள் சதியைக் கொடுத்துவிடுங்கள். சத்தியமாகச் சொல்லுகிறேன், நீங்கள் செய்த காரியத்தின் பயங்கரத்தை நான் மிகைப்படுத்திச் சொல்லவில்லை.'

லிட்டில்டன் அமைதியாக, 'பெண் இன்னும் மயக்க நிலையிலேயே இருக்கிறாள். தீக்காயங்களும் நிறைய இருக்கின்றன. உபாதையில் ஏதேதோ பிதற்றுகிறாள். இரண்டு முறை வீறிட்டுக் கத்தினாள். அவள் தன்னினைவு பெறுவாளா என்பது கடவுளுக்குத்தான் தெரியும். இன்று இரண்டாம் முறையாக அவள் உயிரைக் காப்பாற்றுவதற்கு என்னைப் பயன்படுத்த கடவுள் திருவுளம் கொண்டார். அவள் மயக்கம் தெளியும்வரை பொறுத்திருந்து அவள் விருப்பத்தைத் தெரிந்துகொள்ளாமல் அவளை உங்களிடம் ஒப்புவித்துவிட்டேனானால் கடவுள் என்னை மன்னிக்கமாட்டார். உங்கள் மதத்தின் பேரால் நீங்கள் தெரிந்து செய்கிற ஒரு மூர்க்கமான கொலை யென்றே நான் இதைச் சந்தேகிக்கிறேன். பண்டிதரும், மரியாதைக்குரிய புரோகிதரும், கலகக்காரரும் இம்மாதிரி காரியங்கள் செய்கிறார்கள் என்றால் எனக்கு நம்பமுடிகிறது. ஆனால், அமாத்யா, நீங்கள் ஏன் இதில் கலந்திருக்கிறீர்கள் என்று தெரியவில்லை. உங்களுக்கு ஏதாவது ஆதாயம் இருக்கும்போல் தெரிகிறது.' 'அந்தக் கலகக்காரர் இதில்....' 'தயவுசெய்து குறுக்கிடாதீர்கள். நான் அந்த விஷயத்துக்கும் வருகிறேன். இப்படிப்பட்ட ஒரு கலகக் கூட்டத்தைக் கண்டு பயந்துவிட நான் கோழை அல்ல. நான் சுமாராக குறி பிசகாமல் சுடக்கூடியவன் என்பதையும் நீங்கள் தெரிந்து வைத்திருப்பீர்கள். தவிரவும்-ஆர்டர்லி!' என்று உரத்த குரலில் கூப்பிட்டார்.

வீட்டினுள் இருந்து மகமதிய சிப்பாய் ஒருவன் வெளியே வந்து சல்யூட் அடித்து நின்றான்.

'அவர்கள் எல்லோரும் தயாராக இருக்கிறார்களா?' என்று லிட்டில்டன் கேட்டார்.

மேலும் பன்னிரண்டுபேர் வந்திருக்கிறார்கள், ஹுஸுர்.' 'மிக அதிகம். வீட்டின் வலது புறமாக அவர்களை அனுப்பு.' சிப்பாய் மறைந்தான். சில வினாடிகளுக்குள் ஓர் இருபது ஆங்கிலேயப் படைவீரர்கள், ரவைபோட்ட ஈட்டிமுனை கொண்ட துப்பாக்கிகளை ஏந்தியவண்ணம் வரிசைக் கிரமமாக வந்து மேற்கொண்டு உத்தரவுகளை எதிர்பார்த்து நின்றார்கள்.

புரோகிதருக்கு உதறல் எடுத்தது. அமாத்யா விழித்த விழியிலிருந்து அவரும் இதை எதிர்பார்க்கவில்லை என்று தெளிவாகத் தெரிந்தது.

லிட்டில்டன் அமைதியாக 'நான் ஒன்றும் லாலி அல்ல. ஆனால், ஓர் அபலை திட்டமிடப்பட்டு

கொலைசெய்யப்படும்போது கொலையாளிகளின் புனித குலத்தையோ நோக்கங்களையோபற்றி ஆராய்ந்து கொண்டிருக்கமாட்டேன். அமாத்யா, நீங்கள் உங்கள் கலகக் கூட்டத்தை இங்கு அனுப்பலாம். நான் அவர்களைச் சமாதானப்படுத்துகிறேன்' என்றார்.

'இது நீங்கள் எங்களோடும் மகாராஜாவோடு யுத்தத்துக்கு வருவதற்கு ஒப்பாகும். நாங்கள் இதை மகாராஜாவிடம் தெரிவித்தாக வேண்டும்.'

"நான் உங்களுக்குச் சிரமம் வைக்கமாட்டேன். எனக்கும் அரசரைத் தெரியும். அண்மையில் என்னால் அவருக்கு ஒரு சிறிய உபகாரம் ஆனது உங்களுக்கு நினைவிருக்கலாம். மதத்தின் பெயரால் அவருடைய தலைநகரிலேயே அவரது அந்தரங்கக் காரியதரிசியின் திட்டத்தால் இப்படிப்பட்ட கொலைகள் நடப்பது அவருக்குச் சம்மதமா என்று நானே அவரை நேரில் கேட்கிறேன்."

அமாத்யா பலமாக எதிர்ப்புத் தெரிவித்தார். 'நீங்கள் நியாயமாகப் பேசவில்லை. அவள் சதியாக மனம் ஒப்பியிருந்தாள். காலமான கணவனோடு சேர்ந்து இணைபிரியாமல் மோட்சம் சேரவேண்டும் என்று ஆவலுடன் இருந்தாளே.

'அவள் மயக்கம் தெளிந்தவுடன் அவள் வாயால் கேட்ட பின் தான் நான் இதை நம்புவேன். அதை அறிந்தபிறகுதான் நான் அவளை அனுப்புவேன். புரோகிதனானாலும் சரி, அரசாங்க அதிகாரி ஆனாலும் சரி, அரசரே விரும்பினால்கூட நான் அனுப்பப் போவதில்லை. ஆனால் துளசாஜி கொடுமைக்காரர் அல்ல, நன்றி மறக்கிறவருமல்ல.'

'ஒரு பிராமணப் பெண், அதுவும் புனிதமான சதி, ஒரு நாளேதானென்றாலும் உங்களோடு எப்படித் தங்கமுடியும்!

'அதுதான் உங்கள் பிரச்சினையானால் நீங்கள் தீட்டு என்று கருதுகிற உணவையும் தண்ணீரையும் அவள் தொடமாட்டாள். நீங்கள் என் வாக்கை நம்பலாம். அவள் இன்னும் துளிபாலோ தண்ணீரோ அருந்தவில்லை. அவள் தீக்காயங்களைமாத்திரம்நான்கட்டியிருக்கிறேன். என்னுடைய குமாஸ்தா ஒரு மராட்டிய பிராமணர். அவளுக்குத் தேவையான உணவை அவரைக் கொண்டுவரச் சொல்லுகிறேன். அவரைச் சென்ற வாரம் வேலைக்கு அமர்த்தியது நல்லதாயிற்று. அவர் உங்களைச் சேர்ந்தவர் தான். அமாத்யா, உங்களுக்கு அவரை நன்றாகத் தெரியும். உங்கள் அண்ணாவின் மருமகன் நரஹரிராவ் தான் அவர். இதுவரை அவள் இங்கே ஏதாவது சாப்பிட்டிருக்கிறாளா என்று நீங்களே அவரைக் கேட்டுக் கொள்ளலாம். அவளுடைய பணிப் பெண் சரியான நிமிடத்தில் என்னிடம் வந்து உங்கள் சதித் திட்டத்தைப் பற்றிச் சொன்னாள். அந்தப் பெண் தான் இப்பொழுது அவளுக்குப் பணிவிடை செய்துகொண்டிருக்கிறாள். நல்ல புத்திசாலி அவள். எஜமானியிடம் வாஞ்சையுடன் இருக்கிறாள்.'

'ஹூம். அப்படியானால் அவள் நினைவு தெளிந்து, நானாகத் தான் சதியாக விரும்பினேன் என்று சொல்லுகிறவரையில் அவளை இங்கே வைத்திருக்கப் போகிறீர்கள், இல்லையா? நீங்கள் இப்படித் தலையை நுழைத்ததற்காக அவள் ஒன்றும் உங்களுக்கு நன்றி சொல்லமாட்டாள்.

லிட்டில்டன் சுருக்கமாக, 'யாரிடமிருந்தும் நான் நன்றியை எதிர்பார்க்கவில்லை' என்றார்.

அமாத்யா திடீரென்று 'அவள் மயக்கமாக இருக்கிறாள் என்று சொல்லுகிறீர்கள். நான் அவளைப் பார்க்கவேண்டும்' என்றார். 'என் வார்த்தையே போதுமானது. இருந்தாலும் நீங்கள் அவளுடைய சொந்த மைத்துனனாக இருப்பதாலும் நல்லெண்ணத்துடன் தான் நடந்துகொள்கிறீர்கள் என்ற நம்பிக்கையாலும் அவளை உங்களுக்குக் காட்டுகிறேன்' என்று சொல்லிக்கொண்டே அவர்களை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். மிலேச்சரின் வீட்டுக்குள் நுழைய புரோகிதருக்குப் பிடிக்காவிட்டாலும் அவர்களைத் தொடர்ந்தார். அவருக்கு இன்னும் அதிகமாகப் பிடிக்காமலிருந்த விஷயம் மிக அருகாமையிலிருந்த பிரிட்டிஷ் துப்பாக்கிகளும் ஈட்டிமுனைகளும் தான். சற்றுக் கழித்து வெளியே வந்தார்கள். தோற்றத்தில் திருப்தியுடன் அமாத்யாவும் புரோகிதரும் போய்விட்டார்கள். இன்னொரு சுருக்கமான ஆலோசனைக்குப்பின் கலகக் கூட்டமும் கலைந்தது.

## நினைவு வருதல்

மறுநாள் காலைப்பொழுது, முந்திய நாளைவிட ஒளிமயமான மகிழ்ச்சியைப் பரப்பிக்கொண்டு விடிந்தது. வழக்கப்படி லிட்டில்டன் அன்று குதிரை சவாரி செல்லவில்லை. வராந்தாவில் உட்கார்ந்து சூரியோதயத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார். இந்தியாவில் சூரியோதயத்தையும் சூரியாஸ்தமனத்தையும் பொதுவாக அவர் பார்க்கத் தவறுவதில்லை. ஒளிமிகுந்த ஏழுநிறக் குதிரைகள் பூட்டிய தங்கரதம் தகதக வென்று மேலே வானத்தில் எழுந்தபின் தான் அவர் வீட்டுக்குள் சென்றார். கிளாவிருந்தா ஒரு கட்டிலில் படுத்திருந்தாள். இரவு முழுவதும் கண்விழித்திருந்த சாரதா களைப்பு மிகுதியால் கட்டிலின் கால்மாட்டில் தரையில் படுத்து உறங்கிக்கொண்டிருந்தாள். நாட்டு வழக்கப்படி சாரதா சிக்கென்று அடைத்துவைத்திருந்த சன்னல் கதவுகளை லிட்டில்டன் திறந்து இறைவனின் இலவச வரங்களாகிய காற்றும் வெளிச்சமும் அறையினுள் நுழையவிட்டார். பின் கட்டிலின் அருகில் நின்று மயக்க நிலையில் கிடந்த உருவத்தைப் பார்க்கலானார். வெளிறியிருந்தாலும் முகம் மிக அழகாக இருந்தது. சுருண்ட கூந்தலின் ஒரு பாகம் தீயில் கருகி இருந்தது. காற்றும் ஒளியும் முகத்தில் விளையாடுவதைக் கவனித்துக் கொண்டிருந்த லிட்டில்டன், அவள் கண்ணிமைகள் சற்றுத் துடிப்பதைக் கண்டார். ஒரு வேளை அது தமது பிரமையோ என்று எண்ணும்போது அவை மெல்ல மெல்லத் திறந்து வெற்றுப் பார்வையுடன் அவரை நோக்கின. லிட்டில்டன் ஆர்வத்துடன் உற்றுப்பார்த்தார். அவள் சித்த சுவாதீனத்தையே இழந்துவிட்டாளோ என்று ஒருகணம் பயந்தார். ஆனால்

அந்த அழகிய கண்களில் அறிவொளி மிளிர, அவள் மிகுந்த சிரமத்துடன் பேச்சை வர வழைத்துக்கொண்டு மெலிந்த குரலில், 'நான் எங்கே இருக்கிறேன்?' என்று கேட்டாள்.

'என்னுடைய பங்களாவில் பத்திரமாக இருக்கிறீர்கள். உங்களுக்கு இனிமேல் யாரும் ஒரு தீங்கும் செய்யமுடியாது. உங்களுக்கு என்னைத் தெரிகிறதா? நினைவுபடுத்திப் பாருங்கள். நீங்கள் இதற்கு முன்னால் என்னைப் பார்த்ததில்லை?'

அந்தக் குரலோசையைக் கேட்டதும் எங்கேயோ ஆழத்தில் மங்கிக்கிடந்த நினைவுகள் விழித்து எழுவனபோன்ற உணர்வு இருந்தாலும், அவளால் அதைத் தெளிவாக நினைவுக்குக் கொண்டுவர இயலவில்லை. 'கமலாபாய், கல்யாணி எங்கே? பிணம் என்ன ஆயிற்று?' 'பிணத்தை எரித்தாயிற்று. நீங்கள் பத்திரமாக இருக்கிறீர்கள். இப்பொழுது உங்களுக்கு ஒருவரும் தீங்கு செய்ய முடியாது' என்றார் லிட்டில்டன்.

'கமலாபாயும் கல்யாணியும் எங்கே?' என்று அவள் திரும்பவும் கேட்டாள்.

லிட்டில்டன் பதில் எதுவும் சொல்ல இயலாதவராய் சாரதாவை எழுப்பினார். கனவு கலைந்துவிட்டதாலோ என்னவோ அவள் உளறிக்கொண்டே எழுந்து உட்கார்ந்தாள். எஜமானி கண் திறந்திருப்பதைப் பார்த்ததும் ஆனந்தமும், துக்கமும் பொங்கியவளாய் ஆசையுடன் அவளருகே பாய்ந்து சென்று 'என் கண்ணே, முழிச்சிட்டியா?' நீ கண்ணு முழிச்சதை 'நான் பார்த்துட்டேன், அம்மா' என்று கூவினாள். நோயாளி பரபரப்படையக்கூடாது என்று கருதியதால் சத்தமிடக்கூடாது என்று லிட்டில்டன் அவளைச் சற்று அடக்கினார்.

கிளாவிருந்தா சாரதாவின் முகத்தையே சற்று நேரம் கூர்ந்து பார்த்திருந்துவிட்டு திடீரென்று, 'நீ சாரதாதானே? நீ ஏன் திரும்பி வந்தாய்? அவள் உன்னை ஏசி அடிப்பாளே. அவள் பார்ப்பதற்குள் போய்விடு' என்றாள்.

'அவள் இங்கே இல்லை, என் துரதிர்ஷ்டசாலிப் பெண்ணே! இனி அவள் என்னை அடிக்கவும் முடியாது, ஏசவும் முடியாது. இது அவங்க வீடு இல்லை. இது இந்தப் பரங்கிச் சீமானுடைய பங்களா. அவர்தான் துணிச்சலுடன் வந்து உன்னைக் காப்பாற்றியவர். கடவுளின் கிருபையால் அவர் நல்லா இருக்கணும், மகாராசனாயிருப்பார். உன் மச்சினனான அந்தப் பொல்லாத கயவாளிப் போக்கிரியையும் – அவரு எவ்வளவு பெரிய அதிகாரியாய் இருந்தா என்ன– அவரையும் இவர் விரட்டி விட்டார். அந்தக் கழுகுக் கூட்டம் உன்னைத் திரும்பக் கொண்டுபோறதுக்காக வந்துதே. நான் மாத்திரம் மகாராஜாவா இருந்தா அவங்களை எல்லாம் பிடிச்சு சிறைச் சாலைக்குள் தள்ளி இருப்பேன். என் ராஜாத்தி நீ பிழைச்சுக்கிட்டியே. இந்தக் கெட்டிக்கார வெள்ளைக்காரர் உன் தீக் காயங்களையும் சீக்கிரமே சுகமாக்கிப்பிடுவார்' என்று லிட்டில்டன் தடுப்பதையும் பொருட்படுத்தாமல் ஆனந்த மிகுதியால் பேசிக்கொண்டே போனாள். கிளாவிருந்தா மௌனமாகக் கடந்த நிகழ்ச்சிகளை நினைவுக்குக் கொண்டுவர முயன்றது போல் காணப்பட்டாள். குழம்பிப்போன எண்ணங்களை மீண்டும் நினைவுக்குக் கொண்டு வந்த சிரமத்தினாலோ, உடல் அலுப்பினாலோ கண்களை மூடிக் கொண்டாள். ஆனால் சிறிது நேரம் கழித்து மீண்டும் கண் திறந்து, லிட்டில்டனையும் சாரதாவையும் மாறி மாறிப் பார்த்தாள். ஏதோ கேள்வி கேட்க முயலும் பாவனையில் அவள் உதடுகள் அசைந்தன. ஆனால் சிந்தனையுடன் அமைதியாகவே இருந்தாள். முடிவில் இந்த மயக்கம் முற்றிலும் தெளிந்து பழைய நினைவுகளையும் பெற்றுவிட்டாள். லிட்டில்டனை சற்று நேரம் உற்றுப்பார்த்துவிட்டுத் திடுமென 'அது மகாராஜா எனக்குத் தந்த மரகதப் பதக்கம் அல்லவா?' என்றாள். 'அதுவேதான்.' 'அது உங்களிடம் எப்படி வந்தது? முற்றுகையை விடுவித்து என் உயிரையும் காப்பாற்றிய ஆங்கிலேய தீரருக்கல்லவா நான் அதைக் கொடுத்தேன். அவர் உங்களுக்கு அதைக் கொடுத்துவிட்டாரா?' ' இல்லை .'

'கொடுத்திருக்கமாட்டார் என்றுதான் நானும் நினைத்தேன்' என்றாள் சிந்தனையில் லயித்தவளாய். பின் திடீரென்று, நீங்கள் தான் என் உயிரை இரண்டாவது முறையாகக் காப்பாற்றி இருக்கிறீர்கள். உங்கள் குரல் பழக்கமானதாக இருந்தது. நினைவாழத்தில் மங்கி இருந்ததால் உடனே அடையாளம் தெரிந்து கொள்ளவில்லை. இப்பொழுது தெளிவாகத் தெரிகிறது' என்றாள்.

'என் மூலமாக உங்கள் உயிரை இரண்டாம் முறையாகக் காப்பாற்றக் கடவுள் சித்தம்கொண்டார். நீங்கள் சுகமாய் இருப்பதைக்காண எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது. இனி யாராவது தீங்குசெய்வார்களோ என்று அஞ்சவேண்டிய தில்லை' என்றார்.

அவள் மீண்டும் கண்களை மூடி உதடுகளை அசைத்தாள். தன்னைக் காப்பாற்றிய கடவுளுக்கும் மனிதனுக்கும் நன்றி சொன்னாள் போலும்.

கமலாபாயும் கல்யாணியும் யாவர் என்பதையும், கிளாவிருந்தா கண்விழித்தவுடன் முதல் முதலாக அவர்களைப் பற்றி ஏன் கேட்டாள் என்பதையும் லிட்டில்டன் அறிந்தார். சதியாக விரும்பினாள் என்ற அமாத்யாவின் கூற்று அண்டப் புளுகு என்பதையும் அறிந்துகொண்டார்.

சாரதாவின் கேள்விகளுக்கு கிளாவிருந்தா பின்வருமாறு பதில் சொன்னாள்:

'அன்று மாலை நான் என் அறையில் என் விதியை நினைத்து அழுதுகொண்டிருந்தேன். அப்பொழுது கமலாபாய் கதவைத் திறந்துகொண்டு உள்ளே வந்து என்னைச் சாப்பிடவருமாறு அழைத்தாள். இன்னும் கருக்கலாக இருந்ததால் இவ்வளவு சீக்கிரமே சாப்பிடவேண்டுமா?' என்று கேட்டேன்.

'ஆமாம், அத்திம்பேர் நிலைமை கவலைக்கிடமாக இருக்கிறது. இன்று இரவு தாங்குவதுகூடக் கடினம். அதனால் சீக்கிரமே சாப்பாட்டை முடித்துக்கொள்வது நல்லது' என்றாள்.

'எனக்குப் பசிக்கவில்லை. சாப்பாடு வேண்டாம். அவர் நிலைமை கவலைக்கிடமாக இருப்பதால் எனக்கு அவரைப் பார்க்கவேண்டும்போலிருக்கிறது. நான் போய் அவரைப் பார்க்கலாமா?' என்று கேட்டேன்.

'வேண்டாம், உன்னைப் பார்த்தாலே அவர் உயிர் போனாலும் போய்விடும்' என்று சொல்லி என்னை உள்ளே விட்டு மீண்டும் கதவைப் பூட்டிக்கொண்டு போய்விட்டாள்.

சிலநிமிடங்கள்கழித்துஒருகிண்ணத்தில்பால்கொண்டு வந்து என்னைக் குடிக்கும்படி வற்புறுத்தினாள். அவளோடு வம்பு எதற்கு என்று அதைக் குடித்தேன். அவள் போய்விட்ட சில நிமிடங்களுக்கெல்லாம் தலை சுற்றிக்கொண்டு வந்தது. மயக்கமடைந்தேன். எத்தனை நாழிகை அந்த நிலையில் இருந்தேன் என்று எனக்குத் தெரியாது. அவள் என்னை முரட்டுத்தனமாய் உலுக்கியதில் தான் விழித்தேன். அப்பொழுது அவள் என் கணவர் இறந்துவிட்டாரென்று சொன்னாள். எனக்கு அழமுடியவில்லை. அவள் சொன்னதையே மயங்கிய அறிவு நிலையில் தான் கிரகித்துக்கொண்டேன். 'சற்றுக் கழித்து கல்யாணி வந்தாள். இருவருமாகச் சேர்ந்து என் மைத்துனர் வீட்டிலுள்ள ஓர் அறைக்குள் என்னை நடத்திச் சென்று உள்ளே பூட்டிக்கொண்டார்கள். எனக்குப் படுத்து உறங்கவேண்டும்போல் இருந்தது. 'அம்மாடி அங்கே அவர் இறந்துகிடக்கும்போது நீ உறங்கினால் வெட்கக்கேடு. ஊரில் வம்பு கிளப்புவார்கள். நாங்கள் உன்னுடன் பேசிக்கொண்டிருக்கிறோம். விழித்திருக்கப் பிரயாசப்படு' என்றார்கள். என்னை நடுவில் நிறுத்திப் பிடித்துக் கொண்டு இருவரும் அறையில் மேலும் கீழும் நடக்கவைத்தார்கள். நான் நடந்துகொண்டே அவர்கள் தோளில் தூங்கி விழுந்தபோது என்னைக் கிள்ளினார்கள்.

'இரவுக்கு முடிவே இல்லையோ என்று தோன்றியது. தூங்காமல் இருப்பது நரக வேதனையாக இருந்தது. அந்த ஓர் உணர்ச்சியைத் தவிர மற்ற எதுவுமே எனக்குத் தெளிவாக நினைவில் இல்லை. 'கடைசியில் யாரோ கதவை இரண்டு மூன்று முறை தட்டினார்கள். எங்கிருந்தோ ஒரு பளிங்குக் குப்பியைக் கொண்டு வந்து கமலாபாயும் கல்யாணியும் அதிலிருந்ததை என்னைக் குடிக்கச் சொன்னார்கள். இந்த மயக்கத்தையும் உறக்க நிலையையும் அது மாற்றும் என்றார்கள். விஷமாக இருக்கும் என்று சந்தேகித்து அதைக் குடிக்க மறுத்தேன். ஆனால் இருவருமாகச் சேர்ந்து என்னை விழுங்க வைத்துவிட்டார்கள்.

'சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு விசித்திரமான பூரிப்புணர்ச்சி எனக்கு ஏற்படுவதை உணர்ந்தேன். உடலும் மனமும் இலேசாக ஆகி ஆகாயத்தில் எழுந்து பறப்பதைப்போல் தோன்றிற்று. இந்த உணர்ச்சி ஒன்றைத்தவிர வேறு எதுவும் எனக்குப் புரியவும் இல்லை. நினைவிலும் இல்லை. 'என் கணவரின் பாடைக்குப் பின்னால் கூட்டத்துடன் என்னை அழைத்துச் சென்றதும், அதற்கு முன்னால் கமலாபாயும் கல்யாணியுமாகச் சேர்ந்து என் ஆடைகளையும் ஆபரணங்களையும் மாற்றியதும் மங்கலாக நினைவில் இருக்கிறது. ஆட்களின் இரைச்சல், கூச்சல், மேளச்சத்தம் காதில் விழுந்ததும், எல்லாம் திடீரென்று என் கைகால்களில் தீப்பிடித்துச் சுட்டதும் நினைவிலிருக்கிறது. எனக்கு எப்போதுமே நெருப்பு என்றால் பயம். கூச்சலிட்டுக்கொண்டே விழுந்துவிட்டேன். அதற்கப்புறம் நடந்தது நினைவில்லை. கண்விழித்தபோது என்னைக் காப்பாற்றிய இரட்சகராகிய உங்களையும் என் அன்புச் சாரதாவையும் கண்டேன்.' வெளிறிவறண்டிருந்த அவள் உதடுகள் மகிழ்ச்சிப் புன்னகையால் அசைந்தன.

கதையைக் கேட்டு விட்டு 'ஆண்டவா!' என்றார் லிட்டில்டன். சாரதா மனதில் தோன்றியதை எல்லாம் பட்டவர்த்தனமாக பேசித் தீர்த்தாள். ஆனால் அவர் மேற் கொண்டு கேள்விகள் கேட்டு விஷயங்களைத் தெரிந்துகொள்ள விரும்பியதால் அவள் தன் பேச்சை நிறுத்திக்கொண்டாள்.

ஆனால் அவர்கள் எதற்காக உங்களைக் கொல்ல விரும்பினார்கள்?' 'ஏனா? அவ மச்சினருக்கு அவளுடைய சீதனச் சொத்து மேலே கண். அவா அதைக் குடுக்கமாட்டேன்னா. நான் நேத்துச் சொல்லலையா? அந்த வெக்கங்கெட்ட கமலாபாய்க்கு பாயிமேலே எப்பவும் பகை. துக்கிரித்தனம் பண்ணிக்கிட்டே தான் இருந்தா. அந்தக் கல்யாணி ரெண்டு காசு கெடைக்கு முன்னா எதுவும் செய்வா. அவரு தன் காரியம் முடியறதுக்காக இவ ரெண்டு பேரையும் உபயோகிச்சுக்கிட்டாரு. அவரு பெரிய தந்திரசாலி. அவரை இலேசில் புரிஞ்சிகிடமுடியாது. இப்பத்தான் எனக்கும் எல்லாம் பிடிபடுது. எல்லாம் சாமி கிருபை. எங்க பாயி தப்பிச்சுக்கிட்டா! அதுனாலேதான் என்னைத் திடீர்னு வெரட்டியிருக்கா. இப்பமுல்லா விளங்குது' என்றாள் சாரதா.

லிட்டில்டனுக்கும்கூட இப்பொழுது எல்லாம் புரிந்தது. சூழ்ச்சியில் பழம் தின்று கொட்டை போட்ட அமாத்யாவின் திறமையைக் கண்டு அதிசயித்தார்.

'வேண்டுமானால் என் சொத்தை அவர்களே வைத்துக் கொள்ளட்டும். என்னை விட்டுவிட்டால் போதும். நான் பிச்சை எடுத்தாலும் எடுப்பேனே தவிர அவர்கள் வீட்டு வாசற்படி இனி மிதிக்கமாட்டேன். அவர்களோடு எவ்விதச் சங்காதம் வைத்துக்கொள்ளவும் மாட்டேன்' என்றாள் கிளாவிருந்தா.

'உன்னுடைய சீதனத்தை நீ எதுக்காக அவங்களுக்குப் பயந்துகிட்டு விட்டுக்கொடுக்கணும்? நீ ஒண்ணும் இனிமே பயப்படவேண்டியதில்லை. இலட்சக்கணக்கான சொத்தை வச்சிக்கிட்டு நீ எதுக்காகப் பிச்சையெடுக்கணுமுங்கறேன்: நம்ம பெரிய எசமானர் ஆசைகளையெல்லாம் நிறைவேத்த வேண்டாமா?' என்றாள் சாரதா,

லிட்டில்டனும் அப்படியே தான் அபிப்பிராயப்பட்டார். ஆனால் தற்சமயம் அதைப்பற்றிப் பேசவேண்டாம்; தீக் காயங்கள் ஆறி மன அதிர்ச்சியும் முற்றிலும் நீங்கிய பின் அதைப்பற்றி சாவகாசமாக யோசித்துக்கொள்ளலாம் என்று சொன்னார்.

**தொடரும் ...**



# Rev.R.R மெடோஸ்

**(சாட்சியாபுரத்தின் தந்தை)**

**(1852-1877)**

அருள்திரு G.P. ராஜா

அருப்புக்கோட்டை

வடநெல்லைக்கு வித்தாகவும், சிவகாசியின் முத்தாகவும், சாட்சியாபுரத்தின் சொத்தாகவும் வந்த C.ராபர்ட் ரஸ்ட் மெடோஸ் ஐயர் அவர்கள் 10.02.1829 ஆம் ஆண்டு இங்கிலாந்து தேசத்தில் உள்ள விட்னஸ்ஹாம் என்ற இடத்தில் பிறந்தார். தன்னுடைய தாய், தந்தை அரவணைப்பில் வளர்க்கப்பட்டார். மெடோ அவர்கள் ஜெபத்திலும், வேதத்திலும் நல்ல பக்தியுடன் வளர்க்கப்பட்டார். இங்கிலாந்து தேசத்தில் மிகவும் புகழ்பெற்ற கேம்பிரிட்ஜ் நகரில் இருக்கும் கார்பஸ் கிரிஸ்டி கல்லூரியில் B.A பட்டம் பெற்றார். இங்கிலாந்து தேசத்தின் கேம்பிரிட்ஜ் நகரில் இருக்கும் கார்பஸ் கிரிஸ்டி கல்லூரியில் படிக்கும் போது இந்தியா தேசத்திற்கு மிஷனெரி அழைப்பு கொடுக்கப்பட்டது. அந்த வேளையில் மெடோஸ் அவர்கள் தன்னை மிஷனெரியாக அர்ப்பணித்தார். 1852ஆம் ஆண்டு லண்டனில் C.M.S மூலம் உதவி ஆயராக அருட்பொழிவு கொடுக்கப்பட்டு இந்தியாவிலுள்ள சென்னை மாநகருக்கு வந்து சேர்ந்தார். 1852 முதல் 1854 வரை சென்னையில் மெடோஸ் அவர்கள் தமிழ் மொழியை கற்றுக்கொண்டார்.



### வடநெல்லை ஊழியம்:

1854 முதல் 1858 வரை நான்கு ஆண்டுகள் வடநெல்லையில் மெடோஜ், இராக்லாந்து, பென் மூவரும் இணைந்து நற்செய்தி பணிகளை செய்தார்கள். 1858-ஆம் ஆண்டு இராக்லாந்து ஐயர் அவர்கள் கோதுமை மணியாக சிவகாசியில் மரித்தார். மரித்த பின்பு மெடோஸ் அவர்கள் உடல் நலக்குறைவால் இங்கிலாந்து புறப்பட்டுச்சென்றார்.

### சாட்சியாபுரம் உருவாகுதல்

மீண்டும் மெடோஸ் அவர்கள் 1860 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் தன் மனைவியுடன் சிவகாசிக்கு வந்து சேர்ந்தார். தன்னுடைய சொந்த ஊரான **விட்னஸ்காம்** என்ற ஊர் நினைவாக **சாட்சியாபுரம்** என்ற தமிழாக்கம் செய்து நிலங்களை வாங்கி சிறிய கிராமத்தை உருவாக்கினார். இந்த பகுதியில் 1861 ம் ஆண்டு முதல் தங்கி ஆலயத்தை கட்டி (இன்றை தூய மாற்கு ஆலயம்). வடநெல்லை பகுதி முழுவதும் மேற்பார்வை செய்யும் பணியிலும் ஈடுபட்டார். மெடோஸ் ஐயர் அவர்கள் நற்செய்தி பணி, மருத்துவ பணிகள், ஆலயம் கட்டுமான பணிகள், அதிகமான நிலங்களை வாங்கி மாணவர்களுக்கு தங்கும் விடுதிகள், சேவைப்பணிகள், பெண்களை பாதுகாக்கும் பணிகள், ஏழை எளிய மக்களுக்கு உதவிகள், முதியவர்களை உபசரித்தல், ஆலயங்களை மேற்பார்வையிடுதல் என்று பல பணிகளை செய்துள்ளார். 1863 ஆம் ஆண்டு ஆலயத்திற்க்கு முன்பாகப் பெரிய பந்தல் போட்டு, திருநெல்வேலி பேராயரால் வடதிருநெல்வேலியில் முதல் திடப்படுத்தல் ஆராதனை நடைபெற்றது. இந்த ஆராதனைக்காக அநேக சிறப்பான ஏற்பாடுகள் செய்யப்பட்டது. இதில் 198 பேர் திடப்படுத்தல் பெற்றார்கள்.

### சிவகாசி ஆலயம் :

வடநெல்லைப் பகுதியில் இருக்கின்ற ஆலயத்தைவிட சிவகாசி நகர் பகுதியில் 1876 ஆம் ஆண்டில் மற்ற கட்டிடங்களைக் காட்டிலும் உயரமான கட்டிடமாகப் புதிய ஆலயம் கட்டப்பட்டது. (இந்த ஆலயம் இப்போது இருக்கும் ராக்லாண்ட் நினைவு ஆலயம் அல்ல). இந்த ஆலயம் ஜவுளிகடை தெருவில் அமைந்துள்ளது. இப்போது **சின்ன கோயில்** என்று அழைக்கப்படுகிறது. இப்புதிய ஆலயம் கட்டப்படும் பொழுது மெடோஸ் அவர்களால் அருள்திரு.டேவிட் சபையின் ஆயராகப் பணி அமர்த்தினார். இப்புதிய ஆலயம் பிரதிஷ்டை நாளில் டேவிட் அவர்களால் இயற்றப்பட்ட பாடல் சபை மக்களால் முதன் முறையாகப் பாடப்பட்டது. தம்மனாயக்கன்பட்டி ஆலயம் - 1863 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 10-ம் தேதி தம்மநாயக்கன்பட்டியில் முதல் திருமுழுக்கு ஆராதனை நடைபெற்றது. இந்த ஆண்டிலே இங்கு புதிய ஆலயம் 48 ரூபாயில் கட்டப்பட்டது. இந்த ஆலயம் 30 அடி நீளம், 18 அடி அகலம் கொண்டது. ஆலயம் கட்டச் செலவான 48 ரூபாயில், 36 ரூபாய் தம்மநாயக்கன்பட்டி திருச்சபை மக்கள் நன்கொடையாக கொடுத்த காணிக்கை ஆகும். இவ்வாலயத்தை மெடோஸ் அவர்கள் பிரதிஷ்டை செய்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

### மருத்துவப்பணி

1873-ம் ஆண்டு மெடோஸ் இங்கிலாந்து நாட்டில் உள்ள தன்னுடைய நண்பர்கள் மற்றும் இங்கிலாந்து கிறிஸ்தவர்களிடம் நன்கொடைகளை பெற்று, அந்த நன்கொடைகள் மூலமாக மருத்துவமனை கட்டிடத்தைக் கட்டி, அதற்குரிய உபகரணங்களையும், மருந்துகளையும் இங்கிலாந்து நாட்டிலிருந்து தொடர்ந்து பெற்று வந்தார். மருத்துவ சிகிச்சைகள் நல்ல முறையில் நடைபெற்றது. இப்பொது அந்த இடத்தில் அருள்திரு. இராக்லாந்து ஆலயம் கட்டப்பட்டுள்ளது. இந்த இடம் மெடோஸ் அவர்களால் வாங்கப்பட்ட இடம் என்பது குறிப்பிடதக்கது.

### திருவிலிபுத்தூர் ஆண்கள் பள்ளி மற்றும் சாட்சியாபுரம் பெண்கள் பள்ளி

திருவிலிபுத்தூரில் ஆங்கிலப்பள்ளி நடைபெற்றது. இப்பள்ளியில் உயர்ந்த வகுப்பு பிள்ளைகள் மட்டும் படித்து வந்தார்கள். மெடோஸ் வந்தபிறகு அனைவரும் படிக்கும் வகையில் ஆங்கிலப் பள்ளியை நீக்கிவிட்டு ஆண்களுக்கான தாய் மொழியில் படிக்கும் விதமாக திருவிலிப்புத்தூரில் உருவாக்கினார். சாட்சியாபுரத்தில் பெண்களுக்கான பள்ளியும் உருவாக்கினார். ஆண்களுக்கும், பெண்களுக்கும் தனித்தனியான விடுதிகளையும் உருவாக்கினார். இன்று வரை இப்பள்ளி செயல்படுகிறது.

### திருச்சபைகளில் ஆன்மீக மறுமலர்ச்சி பணிகள் – (1852 – 1877)

1861 முதல் 1877 வரை வடநெல்லை (சிவகாசி பகுதிகள்) திருச்சபைகள் அதிகமாக ஆன்மீக வளர்ச்சி பாதையில் அமைந்தது என்று சொன்னால், அதை யாராலும் மறுக்க முடியாத செயலும், மிகையாகாத ஒன்றாக காணப்படுகின்றது. அநேக ஆலயங்களும், இடங்களும், பினவாங்கிய சபைகளில் மறுமலர்ச்சியை கொடுத்தவர் மெடோஸ் என்பது குறிப்பிடதக்கது. மாதாங்கோவில்பட்டி, கிறிஸ்டியான் பேட்டை, செவல்பட்டி, குறிஞ்சான்குளம், முகட்டுமலை, கல்போது, முதலிபட்டி, கட்டனார்பட்டி, வடுகபட்டி, திருவில்லிபுத்தூர் பகுதி, இராஜபாளையம், சிவகிரி, ராஜகிரி, தலைவன் கோட்டை, பருவகுடி, பொட்டல்பட்டி, வாகைகுளம், எலுமிச்சங்காய்பட்டி, கீழ ஏழாயிரம்பண்ணை, பணையடிப்பட்டி, வல்லம்பட்டி, மஞ்சள் ஓடைபட்டி, சிப்பிபாறை, பாட்டக்குளம் இதுபோன்ற இன்னும் அநேக கிராமங்களில் ஆலயம் இருப்பதற்கு காரணம் மெடோஸ் அவர்கள்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

1852 ஆம் ஆண்டு மெடோஸ் அவர்கள் சென்னையில் கால்பதித்து 1854 ஆம் ஆண்டு வடநெல்லை அதாவது சிவகாசி பகுதியில் ஊழியப்பணியை ஆரம்பித்து பல மாற்றங்களையும், மறுமலர்ச்சியையும் கொண்டு வந்தவர் என்பது குறிப்பிடதக்கது. 1877 ஆம் ஆண்டு தன்னுடை உடல் நிலை சரியில்லாத காரணத்தினால் மெடோஸ் அவர்களும், அவருடைய குடும்பத்தாரும் இங்கிலாந்து நாட்டுக்கு சென்றுவிட்டார்கள். இப்பணியை இந்திய மிஷனெரிடம் ஒப்படைத்துவிட்டார்கள். அவருடைய பணி பல இடங்களில் பெருகி இன்று சாட்சியாபுரம் வட்டகை மன்றம் (மேற்கு-கிழக்கு) என்று இரண்டு வட்டகை மன்றங்களாக பறந்து விரிந்து காணப்படுகிறது, என்றால் அந்த பெயருக்கு சொந்தக்காரர் மெடோஸ் ஐயர் அவர்கள்.

சில நேரங்களில் நாம் செய்கின்ற நல்ல செயல்கள் வெளியில் தெரியாது, மனிதர்களும் நம்மை பாராட்டமாட்டார்கள். அதைப்போல்தான் சிவகாசி பகுதியில் கல்வி பணி, மருத்துவப்பணி, பல ஆலயங்கள் உருவாக்கும் பணி, ஆன்மீக வளர்ச்சி பணி என்று பல பணிகளை செய்து நாடு திரும்பியவர் அருள்திரு.மெடோஸ் மிஷனெரி அவர்கள். அதைப் போல் எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் கடவுளுக்காக செய்யும் சேவைகளை கடவுள் விரும்புகின்றார். மனிதர்கள் பாராட்ட வேண்டாம். கடவுளால் நாம் பாராட்டப்படுவோம். அப்படிப்பட்ட பணிகளை கடவுளுக்காக செய்ய நம்மை அழைக்கின்றார்.

NOVEMBER

**01**

TUESDAY




# 150 TH ANNIVERSARY

## foundation of the Church

Church of south india

# ALL SAINTS' CHURCH

## VELLORE

பால்ராஜ் சாமுவேல்
சென்னை

ஆங்ககிலேய மிஷனெரி பணியில் திருச்சபைகளை ஆரம்பிப்பது முக்கியமான நோக்கமாக இடம் பெற்றிருந்தது. 1835 ஆம் ஆண்டு SPCK நிறுவனமானது ஒரு சிறு கட்டமைப்பை வேலூரில் முதன் முதலில் தொடங்கியது. 38 ஆண்டுகளுக்குப்பின் அது வேலூர் மத்திய பகுதியில் ஜாக்ஸன் தெருவில் அமைந்துள்ள சகல பரிசுத்தவான்களின் திருச்சபையாக வளர்ந்தது. SPCK சிறு அமைப்பில் இருந்தததால், சரித்திரப் புகழ்வாய்ந்த வேலூர் கோட்டைக்குள் St. John's Church ஆனது பெரிய அளவில் கட்டப்பட்டது. 1885 ஆவது ஆண்டு வேலூரில் உள்ள ஆலய சொத்து Dutch Reformed Church of America வுக்கு விற்கப்பட்ட பொழுது ஒரு சில தமிழ் ஆங்க்லிகன் திருச்சபை அங்கத்தினர்கள் ஆற்காடு மிஷனில் இணைந்த்தார்கள். மற்றவர்கள் தங்களது தனி அடையாளத்தை வைத்துக்கொள்ள விரும்பினார்கள். அவர்களது ஆவிக்குரிய தேவைகளை உள்ளூர் இராணுவத்தினரின் போதகர்கள் மற்றும் Church of England Tamil Mission போதகர்கள் சந்தித்து உதவினர்.

SPG கிறிஸ்தவர்களின் ஆலயம் கட்டுவதற்ககென மிஷனெரி பணியின் ஒரு பகுதியாக நிலங்கள் வாங்கப்பட்டன. தெற்காக 56 அடி, கிழக்காக 60 அடி, மேற்கே இராணுவ மருத்துவ மனைக்கு இணையான திறந்த வெளி பக்கமாக 60

அடி ஆகிய அளவுகளிலான நிலமானது தாமோதர முதலியார் என்பவரால் 5.5.1883 அன்று SPG மிஷனுக்கு ரூபாய் 1200/- க்கு விற்கப்பட்டது. (விற்பனை பத்திர ஆதாரம் தேதி: 05.05.1883)

1873 ஆம் ஆண்டு அருள் திரு. ஜாண் B. ட்ரெண்ட் அவர்கள் வேலூர் சபை குருவாக பதவி ஏற்றார். அன்னார் திரு. D. காபிரியேல் அவர்களை உதவிகுருவாக நியமித்தார். அவர் உதவி குருவாக இருந்த போது, ஆல் செயிண்ட்ஸ் தேவாலயத்தின் கட்டுமான பணி (முதலில் எஸ்பிஜி தேவாலயம் என்று அழைக்கப்பட்டது) 1875 இல் தொடங்கப்பட்டு முடிக்கப்பட்டது. இது வடக்கு தெற்கு திசையில் அமைந்திருந்தது. வெனிஷியன் பெண்ட் என்னும் கட்டிடக்கலையினால் அதன் கதவுகள் மற்றும் ஜன்னல்கள் வடிவமைக்கப் பட்டிருந்ததன. 50 ஆண்டுகளுக்குப் பிறகு, பெய்த கனமழையால் தேவாலய கட்டிடம் இடிந்து விழுந்தது. விரைவிலேயே ஒரு புதிய தேவாலய கட்டிடம் விரிவுபடுத்தப்பட்ட பலிபீடத்துடன் (பக்க இறக்கைகள் இல்லாமல்) கட்டப்பட்டு 1922 நவம்பர் முதலாம் தேதியன்று **“ஆல் செயிண்ட்ஸ் திருச்சபை”** என்ற பெயரில் அர்ப்பணம் செய்யப்பட்டது. உட்புற சுவர்கள் கடல் ஓடுகளால் தயாரிக்கப்பட்ட சுண்ணாம்பினால் கவர்ச்சியாக பூசப்பட்டு அவ்வப்போது சோப்பு மற்றும் தண்ணீரால் சுத்தப்படுத்தப்பட்டது. அப்போதைய ஆயர் இல்லம் ஜாக்சன் தெருவை எதிர்கொண்டிருந்தது. ஆலய மணிக் கூண்டானது 1932 ஆம் ஆண்டில் மறை திரு. பீஸ் பி. டேவிட் அவர்களின் குருத்துவ காலத்தின் போது கட்டப்பட்டது. 19 ஆண்டுகளுக்குப் பிறகு (1951) மகளிர் பிரிவின் இறக்கையானது மறை திரு. எஸ். கிறிஸ்துதாஸ் அவர்கள் பணியின்போதும், 8 ஆண்டுகளுக்குப் பிறகு (1959) ஆண்கள் பிரிவானது அருள் திரு. ஏ.எஸ். செல்லையா அவர்களின் பணிக் காலத்திலும் கட்டப்பட்டன. இரண்டு பக்க இறக்கைகள் கொண்ட பிரதான தேவாலய கட்டிடம் இப்பொழுது சிலுவையின் வடிவத்தைப் பெற்றது.

நூற்றாண்டு விழாவைக் குறிக்கும் வகையில், மே 9, 1972 அன்று அருள் திரு. ஹென்றி லாஸரஸ் அவர்கள் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. அப்போது மறைதிரு. டேவிட் திருஞானபிரகாசம் அவர்கள் தேவாலயத்தின் ஆயராக பணிபுரிந்தார். நூறாவது ஆண்டு நினைவாக கீழ்கண்ட நான்கு அம்ச திட்டம் முன்மொழியப்பட்டது:

அ) ஆலயம் விரிவாக்கம் மற்றும் புதுப்பித்தல், ஆ) குருமனை புதுப்பித்தல், இ) ஒரு திருச்சபையின் இளைஞரை குருத்துவப் பணிக்கு படிக்க வைத்தல், ஈ) நற்செய்தி பிரச்சாரங்களை நடத்துதல்




தேவாலய உறுப்பினர்கள், மற்றும் நலம் விரும்பிகளிடமிருந்து நன்கொடை மற்றும் நன்மை திட்டங்களிலிருந்து வசூலித்தல் மூலம் நிதி திரட்டப்பட்டது. வேலூர் பேராயர் செய்தியுடன் 1972 நவம்பர் 1 ஆம் தேதி நூற்றாண்டு நினைவு ஆராதனை நடத்தப்பட்டது.

புதிய ஆலயம்: 1997

காலம் மற்றும் இயற்கையின் அழிவுகள், காரணமாகவும் அவ்வப்போது பழுது பார்க்கும் பணிகள் போன்ற சூழ்நிலைகளின்

நிமித்தமாகவும் தேவாலயம் பாழடைந்த நிலைக்குள்ளானதால், ஒரு புதிய வழிபாட்டுத் தலத்தை கட்டியெழுப்பவேண்டிய அவசியம் ஏற்பட்டது. மறைந்த அருள் திரு. A. சாமுவேல் ஆயர் அவர்கள் தேவாலயத்தின் குருவாக இருந்தபோது, டாக்டர் ஜி. வில்பிரட் (செயலாளர்), திரு. ஜி. தியோடர் (கன்வீனர்), திரு. பி. கனகராஜ் (இணை-கன்வீனர்) மற்றும் திரு வி.ஜே. சாலமன் (பொருளாளர்) ஆகியோருடன செப்டம்பர் 2, 1981 அன்று ஒரு புதிய தேவாலய கட்டிடக் குழு அமைக்கப்பட்டது. இவர்களுடன் திருச்சபையின் வாலிபர் குழுவும் இணைந்து ஆலயக் கட்டிட பணிகளை செயல் படுத்த பல்வேறு வழிகளில் உதவினர். அருள்திரு. ஒய். எரேமியா அவர்கள் தேவாலயத்தின் ஆயராக இருந்த போது புதிய தேவாலயத்தின் அஸ்திவாரம் 1988 ஆம் ஆண்டு சகல பரிசுத்தவான்கள் தினத்தன்று போடப்பட்டது. இதன் கட்டிடப் பணியானது மார்ச் 31, 1991 அன்று (ஈஸ்டர் ஞாயிறு) பிஷப் ஆர்.டி. பாஸ்கரன் அரவர்களால் தொடங்கிவைக்கப்பட்டது.

பழைய பார்சனேஜ் மற்றும் அதன் கொல்லைப்புறத்தை இடித்ததன் மூலம், தற்போதைய இடத்தில் புதிய தேவாலயத்தை நிர்மாணிப்பதற்காக ஒரு நீளமான கிடைமட்ட தரைப் பகுதி கிடைத்தது. கட்டுமானப் பணிகளின் இரண்டு கட்டங்களான நிலத்தடித்தளம் மற்றும் கோயில் பிள்ளை இல்லத்துடன் இணைந்த குருமனை ஆகியன 1992 இல் அருள் திரு. டி. சாமுவேல் பூபாலன் அவர்களின் பணிக்காலத்தின் போது கட்டி முடிக்கப்பட்டன. 1992 ஆம் ஆண்டு ஏப்ரல் 19 ஆம் தேதி (ஈஸ்டர் தினம்) அன்று அடித்தளம் அர்ப்பணிக்கப்பட்டடு, குருமனை மற்றும் கோயில் பிள்ளை இல்லங்கள் டிசம்பர் 25, 1992 அன்றும் (கிறிஸ்துமஸ் தினம்) அர்ப்பணிக்கப்பட்டன.

புதிய தேவாலயத்தின் இறுதி கட்டுமானப் பணியானது மார்ச் 1997 க்குள் நிறைவடைந்தது. புதிய தேவாலய அமைப்பானது பாரம்பரிய தென்னிந்திய ஆங்கிலிகன் கட்டிடக்கலையுடன் நிலத்தடித் தளத்தின் மீது வடிவமைக்கப்பட்டுள்ளது. இது கூர்மையான வளைவுகளுடன் 16 ஆவது நூற்றாண்டு கோதிக் பாணியிலான கட்டிடக்கலையினை பிரதிபலிக்கிறது. உட்புற கூரை முக்கோண வடிவில் அமைந்துள்ளது. அழகான வளைவுகளுடனான சாளரங்கள் மற்றும் கதவுகள் தேவாலயத்தின் சுவர்களில் பதிக்கப்பட்டுள்ளன. பலிபீடம் பளிங்கு கற்கள் பதிக்கப்பட்ட தரையாலானது. பலிபீட மேஜை மற்றும் அதன் சுற்றுவட்டங்கள் கலைவண்ணத்துடன் வடிவமைக்கப்பட்டுள்ளது. திருவிருந்திற்கான முழங்கால் படியிடும் நிலையானது அரை வட்ட வடிவுடன் கூடிய 20 சிலுவை வடிவங்களுடனான மர வேலைப்பாட்டினை உடையது. இதனை பிஷப் ஆர்.டி. பாஸ்கரன் 30 மார்ச் 1997 (ஈஸ்டர் தினம்) அன்று அர்ப்பணம் செய்து வைத்தார். புதிய தேவாலய கட்டுமானத்தின் ஒவ்வொரு கட்டங்களின் அர்ப்பணிப்பும் சகல பரிசுத்தவானாகள் தினத்தன்று நடத்தப் பட்டன.

150ம் ஆண்டு சகல பரிசுத்த ஆலயம் இந்த ஆண்டு நவம்பர் இதை சிறப்பாக கொண்டாடும் வகையில் நவம்பர் 1-ம் தேதி சிறப்பு ஆராதனையுடன் துவங்கி அடுத்த வருடம் நவம்பர் மாதம் வரை பல நிகழ்ச்சிகளையும், பல சமூக நல திட்டங்களையும் செயல்படுத்த உள்ளனர்.

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

பூர்வ நாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறும் போது **'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்'** என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும் போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுக்கின்றன.

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும் பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்றா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

**நம் சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துகின்றோம்:-**

தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜீன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக்கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. **மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த** மிஷனெரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1600 க்கு மேற்பட்டவாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.

- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் **முதல் நூலகம்** என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல்கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனெரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் அனைத்தையும் மறுபதிப்பு செய்து வருகின்றோம்.

- நம்முடைய வரலாற்று சங்கமும் கிறிஸ்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்து மையமும் இணைந்து **'புத்தக வனம்'** செயலி செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றது. இந்த செயலி தமிழகத்தில் முதல் முறையாக டிஜிட்டல் முறையில் கையடக்க வடிவில் புத்தகமாக முழு நூலகமாக உங்கள் கைகளில் கொடுத்துள்ளோம். இன்னும் பல ஆயிரம் புத்தகங்களை பதிவேற்றும் பணி நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.
- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனெரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனெரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்த சாட்சிகளாக மரித்த மிஷனெரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- தமிழ் கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனெரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனெரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனெரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்பணித்த நம் இந்திய மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்று சங்கம் சார்பில் மிஷனெரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனெரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

# புரட்சிப்புயல் ஏமிகார்மைக்கேல்

முனைவர்.த.ஜான்சி பால்ராஜ்
நாவலாசிரியர் , திருநெல்வேலி
jansy.emmima@gmail.com



18 ஆம் நூற்றாண்டின் கடைசியில் தமிழகத்தில் பெரும்பாலான பெண்களின் நிலைப்பாடுவீட்டில்வளர்க்கப்படும் விலங்குகளைக் காட்டிலும் கீழ்த்தரமானதாகவே இருந்தது. உயிர்வாழ்வதற்கான அடிப்படைத் தேவைகளை ஓரளவு பெற்றுக் கொள்ள கணவன், பிள்ளைகள் உட்பட ஏனைய உறவுகளுக்கும் அடிமைகளாகவே வாழ்ந்தனர். அன்றைய சமூகத்தில் குடும்பத்தின் மதிப்பீட்டை நிர்ணயம் செய்யும் அளவுகோலாகதான் ஒவ்வொரு பெண்ணும் பார்க்கப்பட்டாள். பெண்ணின் நல்லொழுக்கம் ஒன்றே குடும்பத்தின் மானம் மரியாதையை கட்டிக் காப்பது போன்ற மாயத்தோற்றத்தை சாதீய அடிப்படையில் காலங்காலமாக வகுத்தும் வைத்திருந்தனர்.

ஒவ்வொரு சாதியமைப்பிலும் அவரவர் சமூக ஏற்பிற்கு ஏற்ற நிலையில் தங்களது சாதியப் பெருமையை அதிகரித்துக் கொள்ளும் நோக்கில் பெண்கள் பல்வேறு கட்டுப்பாட்டிற்குள் பூட்டப்பட்டு வாழ்நாளெல்லாம் சிறகொடிந்த பறவைகளாய் உயிரை மட்டும் சுமந்தபடி நடமாடினர். சற்று வசதியான குடும்பங்களில் தனது கணவன் அல்லது தகப்பனின் வசதியை சமூகத்திற்கு எடுத்துக் காட்டும் விளம்பரபொருட்களாக வலம்வந்தனர். கழுத்து, தலை, கை, கால், மூக்கு, காது, இடுப்பு.... என்று உடல் முழுவதும் மஞ்சள் நிறத்தில் தங்கத்தை உருக்கி ஆபரணங்களாக்கி மாட்டிக் கொண்டிருந்தனர்.

பெண்ணின் பாலுணர்வு, கற்பு என்று பெயரிடப்பட்டு அதை கணவனைத் தவிர்த்து வேறெவரும் கனவிலும் களவெடுத்துவிடாமல் இருக்க திருமணத்திற்கு முன் தகப்பன், சகோதரர்கள் என்ற பாதுகாப்பு வளையத்திற்குள்ளும் திருமணத்திற்குப் பிறகு கணவனின் கழுகுப் பார்வைக்குள்ளும் வைத்துப் பூட்டப்பட்டாள். கவிழ்ந்த தலை நிமிராமல் ஆணின் நிழலில் தன்னை மறைத்துக் கொண்டே திரியும்படி வளர்க்கப்பட்டாள்.

பெண்கள் வெளியில் பிற வேலைகளுக்கு செல்வது அந்த வீட்டின் ஆண்களுக்கு அவமரியாதை. விதிவிலக்காகிப் போகும் சில குடும்ப சூழல்களிலிருந்த ஆண்கள் கையாலாகாதவர்களாக கருதப்பட்டனர். பெண்ணின் சம்பாத்தியத்தில் வாழும் ஆண்களை சொந்த உறவினர்களும் பொருட்படுத்த மாட்டார்கள்.

பெண் பிறந்தது முதல் அடுத்த வீட்டில் உயிர்வாழப்போகும் ஒரு ஜெந்துவாகவே பார்க்கப்பட்டு வளர்க்கப்படுவாள். வேறெந்த எண்ணமும் இன்றி சமைத்தல், துவைத்தல், குழந்தை பெறுதல் அதை வளர்த்தல் என்று எந்நிலையிலும் தன்நலன் பேணாத வேலைக்காரியாகவே பெண்கள் இயங்கினர்.

பால்மணம் மாறாத குழந்தைப்பருவ திருமணங்கள் சர்வசாதாரணமாக நடைபெற்றது. இதற்கும் கற்பனையாய் புனையப்பட்ட கற்பு என்ற ஒன்றின் மீதான அக்கறையே காரணம். திருமணமாகி சில ஆண்டுகளுக்குப் பின்னரே பூப்பெய்தும் பெண்களும் இருந்தனர். மொத்தத்தில் பெண்கள் பிறந்தது முதல் மனைவி என்ற பெயரில் அடுத்தொரு குடும்பத்திற்கு வருத்தங்களை மட்டுமே கூலியாகப் பெறும் வேலைக்காரியாக அனுப்பி வைக்கப்படுவாள்.

சாகக்கிடக்கும் ஆணும் தன் இறப்பில் ஒப்பாரிப்பாடவும் தான் கட்டிய தாலிக்கயிற்றை அறுத்துக் கொண்டு அழவேண்டும் என்பதற்காகவும் மறுமணம் செய்துக் கொள்ளலாம். ஆணிற்கு கற்பு என்பதெல்லாம் கிடையாது.

ஆனால் குழந்தை பருவத்தில் திருமணம் என்ற உறவிற்கு அர்த்தம் தெரியும் முன்பே கணவன் இறந்து போனாலும் கடைசிவரை அப்பெண் வேறொரு ஆணை திருமணம் செய்துக் கொண்டு வாழ்வது வேசித்தனத்திற்கு சமானம். அது அவள் முற்பிறப்பில் செய்த பாவம் என்று முத்திரைக் குத்தப்பட்டு அவளது பெற்றோர் மச்சுப்பாவிய வீட்டில் ஆண்டிற்கொரு குழந்தையைப் பெற்றுத் தாலாட்டிக் கொண்டு சுகபோகமாக வாழ்ந்திருப்பர். அப்பெண்ணோ இவற்றையெல்லாம் பார்த்தபடி மங்கட்டைச்சுவர்களுக்குள் அடைபட்டே கிடக்க வேண்டும்.... விதவை என்ற பெயரோடு..! விதவன் என்ற சொல் தமிழில் இதுவரை இல்லை என்பதே

இதற்கு கூடுதலான சாட்சி.

இத்தகைய அவலத்தை மாற்ற கல்வியறிவு ஒன்றே ஆயுதம் என்பதை உணர்ந்த ஏமி, கல்வியைப்பற்றின விழிப்புணர்வை ஏற்படுத்த தனது சமயப்பணியைப் பயன்படுத்தினார். 1897 ஆம் ஆண்டு முதல் பண்ணைவிளை கிராமத்தைச் சுற்றின பகுதிகளில் உவாக்கர் தம்பதியினரோடு இணைந்து சமயப்பணியில் ஈடுபட்டார்.

ஒரு தூக்கமற்ற இரவில் ஏமிக்கு தன்னாட்டில் வாழும் ஏழைப் பெண்களான துண்டுக்காரிகளின் நினைவுகள் கண்முன் நிழலாடியது. அங்கும் ஆண்களுக்கு நிகராக பெண்கள் மதிக்கப்பட்டதில்லை. ஆனால் இங்கிருந்ததைப் போல சொந்த குடும்பத்தாலேயே புறக்கணிக்கப்படும் அவலம் இல்லை. பெண்களும் தங்கள் வாழ்கையை நடத்த முடிந்த வேலைகளை செய்யலாம். ஆனால் அங்கு பெண்களின் வேலைக்கு ஆண்களுக்கு இணையான ஊதியம் வழங்க மறுக்கப்பட்டது.

வர்க்கப் பேதம் தலைவிரித்தாடியதை கண்டு தனது நாட்டிலேயே வெகுண்டெழுந்தவர் ஏமி. அங்கு இத்தகைய பெண்களுக்கு வேலைநேரம் போக இரவுநேரங்களில் கல்வி புகுட்டி அறிவுபெற செய்தவர் அவர். அவர்களுக்கும் சம ஊதியத்தை வழங்கிட வலியுறுத்தி அந்நாட்டு பத்திரிக்கைகளில் எழுதி மேல்மட்ட மக்களின் கவனத்தை ஈர்த்தார். பணக்கார குடும்பங்களில் சென்று அப்பெண்கள் கல்விகற்க பணம் திரட்டி நிரந்தரக் கூடாரம் அமைத்துக் கொடுத்தார். இதெல்லாம் அவரது இருபது, இருபத்தொரு வயதில் நடந்தவை.

அப்போதே தாழ்த்தப்பட்ட வர்க்கத்திற்காக போராடும் மனத்துடன் துணச்சலாக செயல்பட்ட ஏமி, இந்தியப் பெண்களின் மீதும் அதே கரிசனையில் ஈடுபட இயல்பாகவே தூண்டப்பட்டார். அவரது இரத்தத்தில் பெண்ணினத்தின் அடிமைத்தனத்தை துணிச்சலோடு எதிர்த்துப் போராடும் போர்க்குணமும் ஆற்றலும் மிகுந்திருந்தது.

பெண்கள் தங்களது சொந்த குடும்பங்களாலேயே சமயம், சாஸ்திரம் என்ற பெயரில் விடுதலையின்றி கட்டுண்டு கிடப்பதை சகித்துக் கொள்ள இயலாமல் குமுறினார். உவாக்கரின் மனைவி பர்தாவுடன் சேர்ந்து கிராமங்களில் வீடுவீடாகச் சென்று பெண்களை சந்தித்து அவர்களிடையே கல்வியைப் பற்றின விழிப்புணர்வை ஊட்டினார். எழுத வாசிக்க விரும்பிய பெண்களுக்கு எழுத்துக்களைக் கற்பித்து கல்வி கற்கும் ஆர்வத்தை ஏற்படுத்தினார். தான் தமிழைக் கற்கும் போதே தமிழர்களுக்குத் தமிழ்க் கற்பித்து பெருமிதமடைந்தவர் ஏமி.

புளியமரங்கள், நாவல் மரங்கள், ஆலமரங்கள் என்று அடர்ந்த நிழல்தரும் மரங்கள் நிற்கும் இடங்களிலெல்லாம் தற்காலிகமான கூடாரங்களை அமைத்து உதவியாளர்களின் துணையோடு, தான் கனவிலும் நினைத்து பார்த்திராத முற்றிலும் வேறுபட்ட சுவையில் இருந்த இந்நாட்டு உணவை உண்டு உறக்கம் இன்றி அறைகுறையாய் உறங்கி விழித்தனர். அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலெல்லாம் மாட்டு வண்டிகளில் பயணம் செய்து சமயப்பணியோடு சமுதாயப் பணிகளையும் செய்தனர்.

ஒருநாள் ஏமியும் பர்தாவும் பக்கத்து ஊர் ஒன்றில் வழக்கம் போல் சிறுவர்களை சந்தித்து பாடல்கள், கதைகள் சொல்லிக் கொடுத்து விட்டு நடந்து சென்று கொண்டிருந்தார். ஒரு வீட்டருகில் நின்று குடிக்க தண்ணீர் கேட்டார். ஒரு இருபது வயது மதிக்கத்தக்க பெண் ஒருத்தி வாசலில் நின்று தண்ணீர் செம்பை நீட்டினாள். தண்ணீரை வாங்கிய ஏமி எதேச்சையாக வீட்டிற்குள் கட்டி வைக்கப்பட்ட சாக்கு மூட்டை ஒன்று அசைவதை பார்த்தார். அதிர்ச்சியோடு உற்றுப்பார்த்ததை... தண்ணீர் தந்த அந்தப் பெண் கவனித்தாள். அவள் லேசாக சிரித்துக் கொண்டே அதன் அருகில் சென்று அந்த சாக்கை அவிழ்க்க உள்ளிருந்து எட்டு அல்லது ஒன்பது வயதிருக்கும் ஒரு சிறுமி ஆடையெல்லாம் தூசிகளோடு அதைத் தட்டிவிட்டபடியே வியர்த்த நிலையில் வெளியில் வந்தாள்.

ஏம்மா....அவுங்கதான் முந்தியே பொய்ட்டாங்களே... பிறகு ஏன் இவ்ளோ நேரம் கழித்து...!? என்று அப்பாவியாய் தாயைப் பார்த்தாள் அச்சிறுமி.

ஆமாமா... ஏதேதோ கவலையில் மறந்து இருந்திட்டேன் என்று சொன்னவள்... கவனித்துக் கொண்டு நின்றவர்களைப் பார்த்து, இருந்து குடிங்கோ என்றாள் திண்ணையைக் காட்டி. வெள்ளைக்கார பெண்களை இத்தனை அருகில் முதல்முறையாக பார்த்த இருவரும் அவர்களையே உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றனர்.

குழப்பத்தில் நின்ற ஏமி. சாக்கை காட்டி, ஏன் அதில் இவளை கட்டி வைத்திருந்தாய்? என்றார்.

அது ஒன்னுமில்லை. இவள் புருசன் போன வருசம் திடீருன்னு வெச காச்சல் கண்டு செத்துட்டான். இன்னைக்கு என் தங்கை ஒருத்தியை பெண் பார்க்க வந்துட்டு போறாங்கோ. அதான்... அவிய கண்ணுல இவள் பட்டா அபசகுணமா நினைச்சுடுவாங்கல்ல அதான்....

மை காட். திஸ்சிஸ் குரூல். இது ஒரு குழந்தை. அவளுக்கு கல்யாணம். புருஷன் இறந்துட்டானா? என்று ஓரளவு சரியான உச்சரிப்பில் கேட்டார் ஏமி.

ம்.... தலையை மேலும் கீழும் அசைத்த அந்தப் பெண்ணின் கண்கள் நீர் கோதி நிற்க... சில வினாடிகளில் இமைகள் படபடவென்று அடித்து அந்த உப்பு நீரை விழுங்கி கொண்டன. அந்தச் சிறுமி வைத்தக் கண் வாங்காமல் அவர்களது ஒவ்வொரு அசைவையும், வித்தியாசமான பேச்சையும் பார்த்துக் கொண்டிருந்தாள். குடிங்க தண்ணிய... என்ற அந்தப் பெண்ணின் குரலில் தாய்மையின் பெருந்துயரம் தெரிந்தது.

இருவரும் ஒரு வாய் குடித்துவிட்டு செம்பை கொடுத்தனர். இருங்க மதியம் கஞ்சி குடித்துவிட்டு போகலாம் என்றாள் அந்தப் பெண்.

உங்கள் அன்பிற்கு நன்றி. நாங்கள் இன்னொருநாள்

வருகிறோம்…

இரண்டு வீடுகளைக் கடந்து சென்ற பின்னர், ஏமி அந்த வீட்டைத் திரும்பி பார்த்தார். வாசலில் அந்தப் பெண் பார்த்துக் கொண்டே நின்றிருந்தாள். அந்தக் குழந்தையை காணவில்லை.

கணவனை இழந்த விதவைப் பெண்கள் வாசலை விட்டு வெளியே வர மாட்டார்கள் என்று உவாக்கர் சொல்லியிருக்கிறார் ஏமி, என்றார் பர்தா.

ம்…!

அன்றிலிருந்து அந்த இருவரும் ஏமியின் மனக் கண்களை விட்டு அகலவே இல்லை. இத்தகைய சமூகத்தை நான் ஒருத்தி நினைத்து மாற்றிவிட முடியுமா? எதற்கு எனக்கு இந்த வேலை… தேவையில்லாத ஆதங்கம்? என்று கண்களை மூடி மறக்க முயன்றார். ஆனால் விதி யாரைதான் விட்டு வைத்தது. இந்தியாவிற்குள் கடல்தாண்டி, கண்டங்கள் தாண்டி சும்மாவா வந்தார்.? !

பண்ணைவிளை ஞாயிற்றுக் கிழமை தேவாலய ஆராதனைக்கு முதல் நபராக தன் ஐந்து வயது மகளுடன் ஆலயத்திற்குள் நுழைந்த கைம்பெண்ணான அந்தப் பெண் கைக் கூப்பி மிஷனெரிகள் மூவரையும் பவ்யமாக வணங்கி வணக்கம் தெரிவித்து விட்டு ஒரு ஓரமாக சென்று அமர்ந்தாள்.

இந்தக் கைம்பெண் கொஞ்சம் விடுதலையோடு இருப்பதாக உணர்ந்தார் ஏமி. சில நாட்களுக்குமுன்பு தான் கண்ட அந்தச் சாக்குமூட்டை அககண்முன் வந்து வந்து போனது.

எத்தனையோ ஞாயிற்றுக் கிழமைகளில் இந்தப் பெண்ணைப் பார்த்திருந்தாலும் இந்தமுறைதான் முதன் முதலாக பார்த்ததைப் போல மீண்டும் மீண்டும் அந்த பெண்ணையும் அருகில் இருந்த அவள் மகளையும் பார்த்துக் கொண்டே இருந்தார் ஏமி. வெள்ளைநிற சேலை, முக்காடிட்டிருந்தாள், நகைகள் எதுவும் அணியவில்லை. வழித்து சீவி கொண்டையாக சுற்றி வைக்கப்பட்ட அழகியமுடி, வட்ட முகம், சாந்தமும் அமைதியும் நிலவிய பார்வை. இளம் வயதில் கணவனை இழந்திருக்கிறாள். இவளை எப்படி வீட்டை விட்டு வெளியில் விட்டார்கள். சற்று ஆச்சரியமும் மகிழ்ச்சியும் மனதில் பரவ… கிறிஸ்தவம் இந்தியர்களிடையே சற்று சுதந்திரத்தை வழங்கியிருப்பதை இது சுட்டிக் காட்டியது.

அன்றைய ஆலய வழிபாடு முடிந்ததும் வெளியில் வந்து அந்தப் பெண்ணிற்காக காத்து நின்றார் ஏமி. அவள் தன் மகளின் கையைப் பிடித்தபடி வெளியில் வந்தாள். ஏமி அருகில் சென்று, உங்களுடன் நான் பேச விரும்புகிறேன் என்றார்.

சரி, பேசுங்க என்றாள் லேசான புன்னகையோடு.

வாங்க அந்த மரத்து நிழலுக்கு போகலாம் என்று சற்றுத் தொலைவில் நின்ற வேப்ப மரத்தடியில் சென்றனர்.

உங்க பெயர் ?

எம் பேரு பொன்னம்மாள். இவள் என் மகள், பேரு பரிபூரணம் என்றாள்.

பரிபூரணம்… அழகான பெயர் என்றார் குழந்தையின் கன்னத்தை வருடியபடியே.

என் மாமனார் தான் நம்ம கோயில்ல மெம்பரா இருக்காவல்லா அவுங்க.

ஓ… ஜாண்ராஜ் ஐயாவா?

ஆமா…ஆமா… எங்க தாத்தா அதோ… நிக்கிறாங்க பாருங்க என்றாள் சிறுமி. அவரும் சிரித்துக் கொண்டே அவர்களை நோக்கி வந்தார், கூடவே அவர் மனைவியும் வந்தாள்.

அடிக்கடி ஆலயத்தில் பார்த்திருக்கிறேன். இன்று தான் உங்க மருமகள் என்று எனக்கு தெரியும் – ஏமி.

அப்படியா….? என்று சிரித்தனர்.

இரவு ஆராதனையில் பார்க்க முடியலையே இவர்கள் இருவரையும்!?

ஐயோ…. வாரம் ஒருநாள் கோயிலுக்கு அனுப்புவதையே இந்த ஊர்க்காரங்க என்னென்னவோ பேசுராங்க, எங்க காது கேட்க. சகிக்க முடியல.

அப்படியா..?

ஆமா அம்மா. தாலி அறுத்தவங்க வீட்டை விட்டே வெளியில் போக மாட்டாவ. நம்ம உவாக்கர் ஐயா தான் வீட்டிற்கு வந்து பைபிள் வசனங்களை எல்லாம் சொல்லி ஆண்டவர் பார்வையில் ஆண், பெண் என்ற வேறுபாடே கிடையாது என்று அடிக்கடி சொல்வார். கோவிலுக்கு அனுப்பி வைக்க சொன்னார். எனக்கும் அதுதான் சரி என்று பட்டுச்சி. கொஞ்சமாவது நிம்மதியா இருக்குமேன்னுதான் அனுப்புகிறோம். என்றார்.

பொன்னம்மாள் தலை குனிந்தே நின்றிருந்தாள்.

எனக்கு ஒரு உதவி வேண்டும் என்றார் ஏமி, அவரிடம்.

சொல்லுங்கம்மா, நீங்க கேட்டு நான் மாட்டேன்னு சொல்வேனா என்றார்.

பொன்னம்மாள் இனிமையாக பாடுகிறாள். பைபிள் அறிவும் நிறைந்து இருப்பதை உவாக்கர் ஐயா கேட்ட கேள்விகளுக்கு உடனுக்குடன் பதில் அளித்ததை நான் கவனித்துக் கொண்டே இருந்தேன்… என்றார் பொன்னம்மாவை அன்போடு பார்த்தபடியே.

ஆமாம், வீட்டில் எல்லா வேலைகளையும் முடித்து விட்டு, பைபிளை எடுத்து எப்போதும் வாசித்துக் கொண்டேதான் இருப்பாள். என்றாள் புன்னகை பொங்க மாமியார் தெய்வசிகாமணி.

சரிம்மா, ஏதோ உதவி என்று சொன்னீங்களே… என்றார் மாமனார்.

அதாவது, நமது ஆலயத்தில் நிறைய சிறுவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு ஞாயிறு ஆராதனை முடிந்தவுடன் பைபிளில் உள்ள கதைகள், பாடல்கள் கற்றுத்தர சரியான ஆள் இல்லை. பொன்னம்மாள் அதற்கு சரியான நபர். நீங்க அனுமதி அளித்தால் பொன்னம்மா நிச்சயம்

சம்மதம் தெரிவிப்பாள் என்றார்.

அமைதியானார். சற்று தயங்கியவர் பிறகு, ம்... அதற்கென்ன... இது கடவுள் காரியமாச்சே..

அவளிடமே கேளுங்க, சரின்னா எங்களுக்கும் சரிதான். என்றார் சற்று உற்சாகமிழந்த குரலில். பொன்னம்மாள் ஆனந்த கண்ணீர் சிந்தினாள். கைக்கூப்பி மாமனார், மாமியார், ஏமி என்று வரிசையாக மூவரையும் வணங்கினாள். கன்னங்களில் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடி இதயத்தை இதமாக நனைத்தது.

சரி அடுத்தவாரம் முதல் நீ சண்டே க்ளாஸ் டீச்சர், சரியா? என ஏமி கூற, டீச்சர் என்ற சொல் மட்டும் பெருமிதமாய் அவர்கள் காதுகளில் தேனாய் தொனித்தது. ஏதேதோ கனவுகள் பொன்னம்மாளின் கண்களுக்குள் படையெடுத்து வேதனையின் ரணங்களை விரட்டியடித்தது. ஏமியோடு பேசிய அந்தச் சில நிமிடங்கள் வாழ்வின் மறக்க இயலாத மகிழ்ச்சியை அவளுக்கு வழங்கியது.

பின்னர் சில வாரங்கள் சிறுவர்களுக்கு வேதப்பாடம் நடத்தி ஆழமான தனது இறைபக்தியையும் கற்றுக் கொடுப்பதில் தனக்கிருந்த தனித்திறனையும் வெளிக்காட்டினாள் பொன்னம்மாள். இது ஏமியின் மனத்தை வெகுவாகத் தொட்டது. பொன்னம்மாள் ஏமியின் தோழியாகவே மாறிவிட்டாள்.

பொன்னம்மாள் தனது வேதனைகளை மறக்கத் தொடங்கியிருப்பதை அவளது சுறுசுறுப்பான செயல்களும், சோகம் மாறி புன்னகைப் பூத்த முகமும் காண்பித்தது.

இப்படி எத்தனை எத்தனைப் பெண்கள் வெளியுலகமே தெரியாமல் பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையே வேதனையான வாழ்நாட்களை நகர்த்திக் கொண்டிருக்கிறார்கள். இத்தகையப் பெண்களை, அதுவும் இச்சமூகத்தால் ஒதுக்கப்பட்ட பெண்களை, தேடிச் சென்று அன்பை அளிக்க வேண்டும். அதுவே எனது தெய்வத் தொண்டு. ஆம்... இதைத்தான் என் தெய்வமும் விரும்புகிறார். என்று தனக்குள்ளேயே பேசிக் கொண்டு மரங்களில் கீச்சிட்டுக் கொண்டிருந்த பறவைகளை இரசித்தபடி அங்கும் இங்கும் நடந்து கொண்டிருந்தார் ஏமி.

சரி, அதற்கு என்னோடு இணைந்து பணியாற்ற இந்தச் சமூகத்திலுள்ள பெண்களே வேண்டும் எனக்கு. ஏமியின் நினைவலைகளில் முதலாவது தெரித்த வெண் துளி பொன்னம்மாள் தான். இந்த வாரம் பொன்னம்மாளிடம் இதைப்பற்றி கேட்டுவிட வேண்டும் என்று நினைத்துக் கொண்டார் ஏமி

பொன்னம்மாளுக்கு மற்றுமொரு சுதந்திரம் போராடாமலேயே கிடைத்திருந்தது. அது, இந்த ஒருவாரமாக தினமும் நடக்கும் இரவுநேர ஆலய வழிபாட்டில் கலந்து கொள்வதற்கான அனுமதி.!

ஏமி தன்னோடு பேசிய அந்த நாளில் இருந்தே பார்வைக்குத் தெரியாமல் இச்சமூகம் தன் மீது கட்டியிருந்த அடிமைத்தன கட்டுகள் ஒவ்வொன்றாய் தானாகவே கழன்று விழுவதை உணர்ந்தாள். அந்த ஆலய வளாகம் பொன்னம்மாளின் சுதந்திர தளமாக விரிந்து வரவேற்றது.

ஏமியின் அளவற்ற அன்பு தாயன்பிலும் மேலானதாக தெரிந்தது. ஏமியுடனே அவர்களுக்கு மகளாக இருந்தால் என் முழு வாழ்வும் மகிழ்ச்சியாக இருக்குமே, அவர் வீட்டு வேலைகளை செய்து வாழும் பாக்கியம் கிடைத்தால் போதுமே, கர்த்தாவே நீர் விரும்பினால் எனக்கு அந்தப் பாக்கியத்தை தாரும் என்று மனத்திற்குள் வேண்டினாள்.

ஓரிரு நாட்களில் ஞாயிற்றுக்கிழமை வந்தது. ஏமி ஆலய ஆராதனை முடிந்ததும் பொன்னம்மாளை சந்தித்து தனது விருப்பத்தை தெரிவித்தார். அதற்காகவே காத்திருந்ததை போல பொன்னம்மாள் முகம் மலர்ந்தது. பதிலேதும் கூறாமல் விழித்தாள்.

உள்ளத்தின் மகிழ்ச்சி கண்களில் நீராக தேங்கி நிற்க. கைக்கூப்பி நின்றாள் மௌனத்தால் தன் சம்மதத்தை தெரிவித்தவள் தொலைவில் நின்ற தன் மாமனாரை பார்த்ததும் முகம் சுருங்கி நிலத்தைப் பார்த்து அசையாமல் நின்றாள். ஏமிக்கு அவளின் தயக்கம் புரிந்தது.

பொன்னம்மா, இதில் முதலில் உன் விருப்பமே முக்கியம். மற்றவற்றை நான் கவனித்துக் கொள்கிறேன் என்றார்.

அதற்குள் ஜான்ராஜ் நடந்து அருகில் வந்து, எப்படிமா உங்க ஞாயிறு பள்ளி நடக்குது? என்றார் ஒருவித பெருமிதத்தோடு. எல்லாம் தான் வழங்கிய அனுமதியால்தான் சாத்தியமானது என்ற தோறணையை அவரது உடல்மொழி காட்டியது.

ம்...கடவுளின் அருளாலும் உங்களது தயவாலும் பொன்னம்மாள் நல்ல ஆசிரியராக செயலாற்றுகிறாள்.

ம்....சரி சரி.

பொன்னம்மாள்... எனது மற்ற ஊழியங்களிலும், பணிகளிலும் என்னோடு இருந்து உதவினால் பெண்களிடம் சென்று பேசும்போது மிகவும் உதவியாக இருக்குமென்று கருதுகிறேன்.

என்ன சொல்ல வறீங்கமா!?

பொன்னம்மா முழு நேரமும் என்னோடு, என் பணிகளுக்கு உதவியாக இருக்க வேண்டும். அதற்கு உங்களது அனுமதி ....

என்ன சொல்றீங்க நீங்க. புருசன் இல்லாத இவளை ஆலயத்திற்கு விட்டதையே இந்த ஊரில் எங்களை என்னென்ன பேசமுடியுமோ அதையெல்லாம் பேசி, காரி துப்புறாங்க. இனி உங்ககூட நீங்க போற இடமெல்லாம் ஊர் ஊரா கூட்டிட்டு போனா என் குடும்ப மானம், மரியாதையெல்லாம் என்னாவது. நான் இதுக்கு ஒத்துக்க மாட்டேன்.

நீ வா பொன்னம்மா, வீட்டுக்கு என்றவர் வேகமாக வெளியே நடந்தார் மனைவியோடு. மருமகள் தன் பேச்சை

மறுக்க மாட்டாள் என்ற நம்பிக்கையில்… திரும்பி பார்க்காமல் வேக வேகமாக சென்றார். ஆனால் பொன்னம்மாள் தன் மகளை கையில் பிடித்துக் கொண்டு ஏமியையே பார்த்தபடி கலக்கத்தோடு நின்றிருந்தாள்.

இப்போதுவீட்டிற்குபோஎன்றுதலையசைத்தார்…ஏமி.

ஆலய வளாகத்தைத் தாண்டியதும் ஜான்ராஜ் எதேச்சையாய்த் திரும்பி பார்க்க மனைவி மட்டுமே அருகில் வந்து கொண்டிருந்தார். கோபம் மேலிட பொன்னம்மாளை எட்டிப் பார்த்தார். மிக மெதுவாக சிந்தனையில் ஆழ்ந்தபடி நடந்து வந்து கொண்டிருந்தாள் பொன்னம்மாள். அந்த நிதானம் அவள் மனம் ஏமியோடு வாழ்வதையே விரும்புவதை அவருக்கு புரியவைத்தது.

ஏய்… விழங்காத முண்டம்…. சீக்கிரம் வா… என்று கத்தினார். அங்கிருந்த எல்லோரும் அதிர்ச்சியில் உறைந்து நின்றனர். அவரது இயல்பான மூர்க்க குணம் எல்லோருமே அறிந்ததுதான். ஆனால் என்ன நடக்கிறது என்பதை வேறு யாராலும் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏமியும் மௌனம் காத்தார். ஏதோ மருமகள் மீது கோபிக்கிறார், இது ஒன்றும் பெரிய விசயமாகத் தெரியவில்லை யாருக்கும். நடுத்தெருக்களிலும், பொது இடங்களிலும், பெண்களை உரிமை என்ற பெயரில் கீழ்த்தரமான வார்த்தைகளால் அவமதித்து நடந்து கொள்வதும், அடித்து துன்புருத்துவதும் அன்றைய ஆண்களின் வீரத்திற்கு அடையாளமாகதானே பார்க்கப்பட்டது..!

இரண்டொரு நாட்கள் நகர்ந்தன. பொன்னம்மாளின் வீட்டில் சண்டைகள் மட்டும் ஓயவே இல்லை. புருசனை விழுங்கியவளுக்கு இத்தனை சுதந்திரம் கொடுத்தது என் திமிர்தான். ஊரில எம்முன்னால் வாய் திறக்க யோசிப்பவன்லாம் இன்னைக்கு ஏளனமா பார்த்துட்டு போறான். எங்காவது போய் செத்து தொலைங்க. என்னையும் என் குடும்பத்தையும் கேவலபடுத்தாதீங்க…

கடவுள் தந்த உயிரை நான் தொலைக்க விரும்பல. என்னைப் போல் வேதனையில் தினம்தினம் செத்துக்கொண்டிருக்கும்பெண்களைஉயிர்ப்பிக்கவேண்டும். அதற்கான ஒரேவழி ஏமி அம்மாதான். இனி எதுவந்தாலும் பரவாயில்லை என்று தன் மகளோடு ஏமிகார்மைக்கேலை தேடி பண்ணைவளைக்கே வந்து விட்டாள்.

அவளை அன்போடு அரவணைத்து ஆறுதல் அளித்து பேசிக் கொண்டிருந்தார்கள் ஏமியும் உவாக்கர் தம்பதியினரும். விசயம் தெரிந்து ஜாண்ராஜ் ஊரார் சிலரை அழைத்துக் கொண்டு பண்ணைவிளைக்கு வந்தார். உவாக்கரை சந்தித்து, புத்திமதி சொல்லி வீட்டிற்கு அனுப்பி வையும் என்றார்.

பொன்னம்மாள், இங்க வாங்க இருவரும் என்றார் வீட்டிற்குள் பார்த்தபடி…

ஜாண்ராஜ் ஏழெட்டுபேரை அழைத்து வந்திருந்தார். அவர்களும் நின்றிருந்தனர்.

பொன்னம்மாளும் அவளோடு ஏமியும், பர்தாவும் வெளியே வந்தனர்.

ஏய்… ஓடுகாலி, என்ன பாவஞ்செய்தோமோ உன்னையெல்லாம் கட்டிட்டு வந்து இப்படி கேவலப்படுகிறோம் பாரு… ச்சே… வீட்டுக்கு வந்து சாவு…. நல்ல பேராவது கிடைக்கும் என்று கனைத்தார்.

அமைதியாக நின்றிருந்த பொன்னம்மாள், எனக்கு இங்கேயே சாகதான் விருப்பம். நான் எங்கும் வரல. மன்னிக்கவும் என்றாள் கைக்கூப்பி. அழுகையை அடக்க முடியாமல் விம்மி விம்மி அழுதாள். நான் இங்கேயே கோயிலுக்கும் இவர்களுக்கும் உதவியா இருந்துட்டு நிம்மதியாக சாகிறேன், என்னை விட்டு விடுங்க, உங்க பேரை ஒருநாளும் அசிங்கம் பண்ணும்படி நடக்கவே மாட்டேன்… இது என் பிள்ளைமேல் சத்தியம் என்று மகள் தலையில் கைவைத்து ஏங்கி, ஏங்கி கதறியழுதாள்.

இழுத்துக் கொண்டுபோக வந்த அத்தனைவரையும் அவளின் அப்பழுக்கற்ற அன்பின் கண்ணீர் கோபத்தை களைந்து சோகத்தை ஏற்படுத்தியது.

சரிசரி, விடுங்க கழுதை எங்கிருந்தாலென்ன, இதெல்லாம் முந்தியே யோசிச்சி நடந்திருக்கணும். மொதல்லயே நீர் தப்பு பண்ணுட்டீர். இப்பம் சொல்லி என்னசெய்ய. மகனே போய்ட்டான்… இனி இதுவெல்லாம் எதுக்கு மச்சான். செத்து தொலஞ்சிட்டதா நெனச்சிரும். வாரும் என்றான் அந்தக் கூட்டத்தில் உறவினன் ஒருவன்.

இல்ல, இங்கயே இதுகளை தீர்த்து கட்டிட்டுப் போவோம்.

என்னவே சொல்லுதீர். வாரும் பெறகு பார்த்துக்குவோம்… என்றான் மற்றொருவன். வந்தவர்கள் ஒவ்வொருவராக வெளியேற தயாராகினர்….!

ஆக… பொன்னம்மாள் ஏமியின் புரட்சிப்படையில் முதல் வீராங்கனையானாள்.

பொன்னம்மாள் இவ்வாறு, தான் ஏமியோடு வந்து அடைக்கலமாகி சுதந்திரம் பெற்ற விதத்தை எடுத்துக் கூற… லட்சுமியின் மனக்கண்களில் அனைத்தும் காட்சிகளாய் விரிந்தன…! சிறுமி பரிபூரணம் அருகில் அமர்ந்து புதிய அக்கா லட்சுமியை இமைக்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அடுத்து…நீங்க எப்படி…!? என்பதைப் போல் சுவற்றில் சாய்ந்திருந்த நபரை லட்மசுமியின் கண்கள் பார்க்க…

சரி சரி… நேரமாயிருச்சி எல்லோரும் சாப்பிட வாங்க… பிறகு வந்து எல்லாருடைய கதையையும் கேட்கலாம். இன்று இரவு முழுவதும் லட்சுமியை தூங்க விடாமல் எங்க எல்லோருடைய வரலாற்றையும் சொல்ல தானே போறோம்….. சரியா? என்றாள் அவள்… எல்லோர் முகத்திலும் ஆனந்தம் பொங்க, வாய்விட்டுச் சிரித்தனர் லட்சுமியும் பரிபூரணமும்..

**தொடர்வாள் பெண்…!**

Return Requested:

Tamil Printed Book- For Private Cirulation Only

To


**CHRISTAVA VARALATRU SUVADUGAL**
# 2.2.3(4)North Street,
Bungalow Surandai-627859.
Tenkasi District
Tamil Nadu
Ph: 04633 290401





Owned & Published By TINNEVELLY CHRISTIAN HISTORICAL SOCIETY, Tamil Eduction- For Private Cirulation Only
Editor|G.MUTHAIAH SELVAKUMAR| at 2.2.3(4)North Street, Bungalow Surandai-627859. Tenkasi District Ph: 04633 290401